# உங்களுக்காகவே உல்லாசமான இந்த விடுமுறை



## இங்கே...



நீங்கள் தேர்வு செய்யுங்கள்.

நாங்கள் வடிவமைக்கிறோம்





எங்கு செல்ல வேண்டும், தேர்ந்து எடுங்கள். நாங்கள் அழைத்துச் செல்கிறோம்.
ஓய்வாக, உற்சாகமாக, உல்லாசமாக ஒவ்வொரு நொடிப் பொழுதையும் அனுபவித்து மகிழுங்கள்.

பரவசம், அதிசயம், எழுச்சி, உல்லாசம் எல்லாம் நிறைந்த தமிழ்நாடு. ஒவ்வொருவருக்கும் அவரவர் ஆர்வத்திற்கேற்ப அனைத்து அம்சங்களையும் கொண்டது தமிழ்நாடு. இவற்றையெல்லாம் உங்கள் ரசனை மற்றும் நிதிநிலைக்கேற்ப வடிவமைக்கப்பட்ட TTDC சுற்றுலாப் பயணத் திட்டங்களில் அனுபவித்து மகிழுங்கள். **இரயில் மற்றும் சாலை சுற்றுலா, பல இடங்களை உள்ளடக்கிய சுற்றுலா, யாத்ரீகர்களுக்கான ஆன்மீக சுற்றுலா மற்றும் மலைவாச ஸ்தலங்களுக்கான சுற்றுலா.** சொகுசு பயண வசதி, அருமையான தங்கும் இடவசதி, சுவையான, சுகாதாரமான உணவு வகைகள் மற்றும் வழிகாட்டி ஆகிய எல்லா வசதிகளும் இந்த சுற்றுலாப் பயணத் திட்டங்களில் இடம் பெற்றுள்ளன. எனவே, உங்களுக்கு உகந்த வகையில் இந்த இனிய விடுமுறைக் காலத்தை அனுபவித்து மகிழ, நீங்கள் செய்ய வேண்டியது உங்கள் சுற்றுலாப் பயணத் திட்டத்திற்கு முன்பதிவு செய்து விட்டு மகிழ்ச்சிக் கடலில் மூழ்கித் திளைக்க வேண்டியதுதான்.

*விடுமுறை என்றால் அட்டகாசமான விடுமுறை! இல்லையா!*

| பல இடங்களை உள்ளடக்கிய சுற்றுலா | |
|---|---|
| மாமல்லபுரம் சுற்றுலா | (1 நாள்) |
| திருப்பதி சுற்றுலா | (1 நாள்) |
| நவகிரக சுற்றுலா | (3 நாட்கள்) |
| அறுபடை வீடு சுற்றுலா | (4 நாட்கள்) |
| தென்னிந்திய சுற்றுலா | (6 நாட்கள்) |
| மூகாம்பிகை சுற்றுலா | (7 நாட்கள்) |
| கோவா - மந்த்ராலயம் - புட்டப்பர்த்தி சுற்றுலா | (8 நாட்கள்) |
| தமிழ்நாடு சுற்றுலா | (8 நாட்கள்) |

| இரயில் மற்றும் சாலை சுற்றுலா | | |
|---|---|---|
| டெல்லி | - சென்னை - | டெல்லி |
| மும்பை | - சென்னை - | மும்பை |
| கொல்கத்தா | - சென்னை - | கொல்கத்தா |
| அகமதாபாத் | - சென்னை - | அகமதாபாத் |
| லக்னோ | - சென்னை - | லக்னோ |
| ஜெய்ப்பூர் | - சென்னை - | ஜெய்பூர் |
| ஹைதராபாத் | - சென்னை - | ஹைதராபாத் |

செ.ம.தொ.இ./1456/வரைகலை/2005



மேலும் விவரங்களுக்கு, தொடர்பு கொள்ளவும் : **தமிழ்நாடு சுற்றுலா,**
தொலைபேசி : +91-44-25383333 / 4444 / 9857
நிகரி : +91-44-25361385 (சென்னை, இந்தியா)
மின்அஞ்சல் : ttdc@vsnl.com; www.tamilnadutourism.org

TTDC உணவு விடுதிகள் மற்றும்
பயணத் திட்டங்களுக்கு
online-ல் முன்பதிவு செய்ய
www.ttdconline.com காணவும்.





அம்புலிமாமா மதிமுகம் : 58 நவம்பர் : 2005 புன்னகை : 11



## பொருளடக்கம்

★ விதியின் விளையாட்டு ...7
★ சோதிடம் பலிக்கவில்லை...9
★ சிறந்த உதவி எது? ...26
★ நியாயமான தீர்ப்பு ...28
★ அன்ட்ரோமேனியா : ரெப்டிலியா பகுதி-2 ...31
★ ஒரு கோடைக்கால சனிக்கிழமை ...44
★ சிறுவர்களைப் பற்றிய செய்தி ...46
★ வாசகர்களுக்கானக் கதைப் போட்டி ...47
★ ஜாதகக் கதை ...48
★ எப்போதோ நடந்த தவறு! ...51
★ இந்தியாவின் இன்முகம்...52
★ சாபங்கள் வரங்களாக மாறின! ...59
★ சூர்யா ...63
★ பாரதப் பண்பாட்டு நிகழ்ச்சிகள் ...67
★ புயல், வெயில், காற்று மற்றும் மரம் ...68
★ போட்டோ வாக்கியப் போட்டி ...70

## சிறப்புப் படைப்பாக



பயங்கரப் பள்ளத்தாக்கு-2 ... 13



நவீன வேதாளக் கதை... 19



அயல் நாட்டுக் கதைகள்... 23



மகாவிஷ்ணு-23 ... 53

**SUBSCRIPTION**

For USA and Canada
Single copy $2
Annual subscription $20

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
Subscription Division

CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal,
Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில் உங்கள்** சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# இயற்கை அன்னையின் சீற்றம்

இயற்கை அன்னை சில சமயங்களில் மனிதகுலத்திற்கு எதிராக சீறியெழும்போது, வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்றோ, வளமிக்க நாடு அல்லது பின்தங்கிய நாடு என்றோ பாகுபாடுகள் காட்டுவதில்லை. சமீபத்தில் அமெரிக்காவில் ஏற்பட்ட 'காட்ரினா' என்ற பெயர் கொண்ட பயங்கரப் புயலை இதற்கு உதாரணமாகக் கூறலாம். அத்தகையதொரு புயல் வீசப்போவதன் அறிகுறிகள் முன்னமே தெரிந்திருந்தும், அமெரிக்கா தகுந்த நேரத்தில் உரிய பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கத் தவறி விட்டது.

ஆனால் புயலின் சீற்றத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு, அமெரிக்காவில் வாழும் இந்திய சீக்கியர்கள் அணிதிரண்டு உதவி செய்தது மனித நேயம் படைத்த அனைத்து மக்களின் பாராட்டுதல்களைப் பெற்றது மட்டுமன்றி இந்தியர்களுக்கு மிகவும் பெருமை சேர்க்கும் விஷயங்களில் ஒன்றானது. புயல் நிவாரண நிதிக்காக சீக்கியர்கள் மட்டும் ஒரு லட்சம் டாலர் நிதியுதவி செய்துள்ளனர்.

இந்தியர்களுக்கு புகழ் ஈட்டித்தந்த அவர்கள் பணியை பாராட்டும் அதே சமயத்தில், இத்தகைய இயற்கையின் சீற்றங்கள் ஏன் உண்டாகின்றன என்பது பற்றியும் நாம் சிந்திக்க வேண்டும். மனிதர்கள் இயற்கைக்கு எதிராக செயற்படுவதன் விளைவே, இத்தகைய இயற்கை நிகழ்ச்சிகளுக்குக் காரணமாக அமைகின்றன. இயற்கையின்பால் நமது அணுகுமுறையை மாற்றிக் கொள்ளும் காலத்தின் கட்டாயத்திற்கு நம்மை தயாராக்கிக் கொண்டு, இயற்கையோடு ஒத்துப் போகும் செயல்முறைகளை நாம் இனியாவது கடைப்பிடிப்போமாக! இதுவே வரப்போகும் தீபாவளித் திருநாளில் நமது சிந்தனைக்கு உணவாக அமையட்டும்!

ஆசிரியர் : **விஸ்வம்**











# விதியின் விளையாட்டு

ஏலகிரியில் வசித்து வந்த துர்காவிற்கு ரகுநாதன் ஒரே பிள்ளை. துர்காவின் கணவர் இறந்ததும் துர்கா ரகுநாதனை சிறப்பாக வளர்த்தாள்.

ரகுநாதன் வாலிபப் பருவம் எய்தியவுடன், துர்கா அவனுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பினாள். வரப்போகும் மருமகள் தன்னுடைய அந்தஸ்திற்கு ஏற்றவளாக இருக்க வேண்டுமென்று ஏராளமான வரதட்சிணை தரவேண்டுமென்றும் விரும்பினாள். ஆனால் ரகுநாதனோ அந்த ஊரிலிருந்த நாராயணன் என்ற ஒரு நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவரின் மகளான சிந்தூரியை மணக்க விரும்பினான். இதை அறிந்தவுடன் துர்கா அதற்கு மறுப்பு தெரிவித்தாள். ஆனால் ரகுநாதனோ தன் விருப்பத்தில் பிடிவாதமாக இருந்தான்.

ஒருநாள், சிந்தூரியின் தந்தையின் உறவினரான கோபாலன் என்ற கிழவர் துர்காவைத் தேடி வந்தார். அவர் துர்காவிடம், ''நான் துர்காவின் தந்தை நாராயணனின் நண்பன். அவனால் நீ எதிர்பார்க்கும் வரதட்சிணையை தர முடியாது. ஆனால் ஒரு விஷயம் தெரிந்து கொள். சிந்தூரியின் தாய்க்கு மிக அதிகமான பரம்பரை சொத்து உள்ளது. சொத்தின் மதிப்பு மட்டும் இருபது லட்சம் ரூபாய் தேறும். சிந்தூரிக்குத் திருமணம் ஆனவுடன், அந்த சொத்தை அனுபவிக்கும் உரிமை அவளுக்குக் கிடைத்து விடும்'' என்றார்.

இருபது லட்சம் சொத்து என்றவுடன், துர்காவிற்கு மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டது. உடனே அவள் கோபாலனிடம், ''நீங்கள் வயதானவர். ஆகையால் பொய் சொல்ல மாட்டீர்கள் என்று நம்புகிறேன். உடனே சென்று நாராயணனிடம் திருமணத்திற்கு சம்மதம் தெரிவியுங்கள். ஆனால்

-அமுதா-

நீங்கள் கூறியபடி சிந்தூரிக்கு அந்த சொத்து வந்து சேராவிட்டால், அவளை வீட்டை விட்டு விரட்டி விடுவேன், ஜாக்கிரதை!'' என்று மிரட்டினாள்.

விரைவிலேயே ரகுநாதனுக்கும், சிந்தூரிக்கும் திருமணம் இனிதே நடந்து முடிந்தது. நாராயணன் தன்னாலியன்ற அளவு திருமணத்தை சிறப்பாக நடத்தி, சொற்பத் தொகையை வரதட்சிணையாக அளித்தார். ஆனால் துர்கா இதை எல்லாம் பொருட்படுத்தவில்லை. ஏனெனில், சிந்தூரிக்குத்தான் பெரிய சொத்து கிடைக்கப் போகிறதே என்ற எண்ணத்தில் பொறுமையாக இருந்தாள். ஆனால் திருமணமான ஒரு மாதத்திற்குப் பிறகும் சொத்தைப் பற்றி பெண் வீட்டார் எதுவும் குறிப்பிடவேயில்லை.

அதனால் கோபாலனை அழைத்து, ''நீங்கள் குறிப்பிட்ட அந்த சொத்து எங்கே? சிந்தூரிக்கு பல லட்சங்களை அனுபவிக்கும் உரிமை திருமணமான பின் அவள் தாய் மூலம் கிடைக்கும் என்றீரே! அது என்னவாயிற்று? '' என்று கேட்டாள்.

அதற்கு கோபாலன் நிதானமாக, ''துர்கா! இப்போதும் அதையே சொல்கிறேன். திருமணமான வுடனேயே, உன் மருமகள் சிந்தூரி இருபது லட்சம் சொத்திற்கு உரிமை யானவளாக ஆகி விட்டாள். சற்று நிதானமாகக் கேள்! சிந்தூரிக்குத் தாயில்லை. திருமணத்திற்குப் பின் சிந்தூரி உங்கள் மகள். இனிமேல் அவள் உங்களை 'அம்மா' என்று தான் கூப்பிடுவாள். அப்படியானால் உங்கள் திரண்ட சொத்தெல்லாம் அனுபவிக்கும் உரிமை அவளுக்கு வந்து விட்டதில்லையா! அதைத்தான் நான் அன்று குறிப்பிட்டேன்!'' என்றாரே பார்க்கலாம்.

அவர் கூறியதைக் கேட்டு துர்கா திகைத்து நின்றாள். அவர் கூறியதை அவளால் மறுக்க முடியவில்லை. யோசித்துப் பார்த்ததில் நடந்த தெல்லாம் விதியின் விளையாட்டு என்று அவளுக்குத் தோன்றியது. ஆகையால் நடந்ததையெல்லாம் மறந்து, தனது மருமகளான சிந்தூரியை மகளாக எண்ணி வரவேற்பதற்குத் தயாரானாள்.





# சோதிடம் பலிக்கவில்லை

கேசவபுரத்தில் உமாகாந்தன் என்ற அனாதை வாலிபன் வசித்து வந்தான். நற்குணங்கள் நிரம்பிய அ வன் கடின உழைப்பாளியும் அறிவாளியும் கூட! அவன் திறமையைக் கண்ட அவனுடைய முதலாளி ஒருநாள் அவனிடம் ''என்னுடைய உறவினர் காமேஸ்வரன் நகரத்தில் இருக்கிறார். அவருக்கு உன்னைப் போன்ற ஒருவன் வேலைக்குத் தேவை. நீ அங்கு சென்று வேலை செய்!'' என்று அறிவுரை தந்தார்.

அதன்படி உமாகாந்தன் தன்னுடைய கிராமத்தை விட்டு, ஒருநாள் நகரத்திற்குக் கிளம்பினான். நகரத்திற்குச் செல்லும் வழியில் ஒரு காடு இருந்தது. காட்டைக் கடந்து செல்லுகையில், ஒரு மரத்தடியில் ஒரு இளைஞனும் யுவதியும் அமர்ந்திருந்தனர். அ வர்களுடன் நிகழ்த்திய உரையாடலிலிருந்து அவன் பெயர் மாதவன் என்றும், அவனுடைய தங்கையின் பெயர் வந்தனா என்றும் தெரிய வந்தது. அவர்களும் நகரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தவர்கள் தான்! தாங்கள் சுமந்து வந்த பொருட்களின் சுமையால் களைத்துப் போயிருந்தனர். ஆனால் அவ்வாறு ஓய்வெடுத்தால், இருட்டுவதற்குள் காட்டைக் கடந்து செல்ல முடியாது என்று அவர்களை எச்சரித்த உமாகாந்தன் தன்னுடைய சுமைகளோடு, அவர்களுடையதையும் எடுத்துக் கொண்டான்.

நகரத்தை அடைந்ததும், மாதவன் காந்தனிடம் பத்து பொற்காசுகளை அளித்து, ''உன்னுடைய உதவிக்கு நன்றி'' என்றான். அவற்றை வாங்க மறுத்த காந்தன், ''உங்களை என் உடன் பிறந்தவர்களாக பாவிக்கிறேன். ஆகவே நான் பணம் வாங்க மாட்டேன்'' என்றான்.

அதற்கு மாதவன், ''நான் ஒரு சோதிடன். உன் முகத்தைப் பார்த்த

-காயத்ரி சங்கரன்-



துமே நீ ஒரு பாக்கியசாலி, நல்லவன் என்று என்று தெரிந்து கொண்டேன். எங்கே உன் கையைக் காண்பி,'' என்று மாதவனுடைய கைரேகைகளை உன்னிப்பாக கவனித்தபின், ''காந்தா! நீ ஒரு பாக்கியசாலி! எதிர்காலத்தில் அதிருஷ்டம் உன்னைத் தேடி வரும். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை உள்ளது. உனக்கு வரப்போகும் மனைவியின் பெயரும் உன் பெயரும் ஒன்றுபோல் இருக்க வேண்டும். நீங்கள் ஒருவரை ஒருவர் அந்தப் பெயரைச் சொல்லி அழைக்க வேண்டும். அப்படிச் செய்தால் உனக்கு அதிருஷ்டம் உண்டாகும்! அப்படி நடக்காவிடில், உன் பெண்கள் யாருக்காவது அவ்வாறு வாய்ப்பு கிடைத்தாலும், உனக்கு அதிருஷ்டம் உண்டாகும். இதை நீ யாரிடமும் கூறக் கூடாது'' என்றான்.

அவன் தங்கை வந்தனா, ''நீ அதிருஷ்டசாலியாக மாற எதிர்காலத்தில் என்னால் இயன்ற உதவியைக் கட்டாயம் செய்கிறேன்!'' என்றாள். பிறகு அவர்கள் பிரிந்து சென்றனர். காந்தன் தன் புதிய முதலாளியான காமேஸ்வரனை சந்தித்தான். காமேஸ்வரன் காந்தனை வரவேற்றுத் தன்னிடத்தில் வேலைக்கு அமர்த்தினார். காந்தனுக்குத் தன் புதிய முதலாளியைப் பிடித்துப் போயிற்று.

விரைவில் முதலாளியே ஒரு பெண்ணைப் பார்த்து அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார். அவன் மனைவியின் பெயர் காந்தா என்று அறிந்ததும், தன் மனைவியிடம், ''காந்தா! நான் உன்னை காந்தா என்று அழைப்பதுபோல், நீயும் என்னை காந்தா என்று கூப்பிடு!'' என்றான். ஆனால் அவளோ, ''ஐயையோ! கணவனைப் பெயர் சொல்லிக் கூப்பிட மாட்டேன்!'' என்று ஒரேயடியாக மறுத்து விட்டாள்.

காந்தன் வாழ்க்கையில் எந்த முன்னேற்றமும் ஏற்படவில்லை. காலப்போக்கில் அவனுக்கு பத்மா, கிருஷ்ணன், அருணா என்று வரிசையாக குழந்தைகள் பிறந்தன. காலம் ஓடியது. காந்தனுடைய மகள் பத்மா திருமண வயதை எய்தினாள். காந்தன் பத்மநாபன் என்ற பிள்ளையை தன் பெண்ணிற்கு மணம் செய்து வைத்தான். தன் மகளிடம், ''நீ உன் கணவனை பத்மா என்று அவன் பெயரை வைத்தே கூப்பிடு. அவனும் உன்னை பத்மா

என்று கூப்பிடட்டும். இப்படி இருவரும் ஒரே பெயரை வைத்து அழைத்துக் கொண்டால், இருவரும் நலமாக இருப்பீர்கள்!'' என்றான்.

பத்மாவும் அதற்கு ஒப்புக் கொண்டு கணவன் வீடு சென்றாள். ஆனால் தன் புக்ககத்தில் மாமியார் எழுப்பிய கடும் எதிர்ப்பால், பத்மாவால் தன் கணவனைப் பெயர் சொல்லி அழைக்க முடியவில்லை. இதையறிந்த காந்தன் தனக்கு அதிருஷ்டம் ஏதும் இல்லை என்று பெரிதும் வருந்தினான்.

இதற்கிடையில் காட்டு வழியில் காந்தனை சந்தித்த மாதவனும், வந்தனாவும் சில ஆண்டுகள் நகரத்தில் இருந்தபின், வெளி நாட்டிற்குச் சென்று விட்டார்கள். அங்கு அவர்கள் சிறப்பாக வியாபாரம் செய்து ஏராளமான செல்வத்தைக் குவித்தனர். இருவரும் வெளி நாட்டிலேயே திருமணமும் செய்து கொண்டனர். பல ஆண்டுகள் அங்கே கழித்தபின், தங்கள் சொந்த நகரத்திற்கே திரும்பி வந்தனர். அன்று தங்களுக்கு உதவி செய்த காந்தனை வந்தனாவால் இருபது ஆண்டுகள் கழித்தும் மறக்க முடியவில்லை. காந்தனின் இருப்பிடத்தை விசாரித்து அறிந்து கொண்ட வந்தனா, அவனுக்குத் திருமண வயதில் ஒரு பெண் இருப்பதையும் தெரிந்து கொண்டாள். ஒருநாள் நேராகவே வந்து காந்தனை சந்தித்தாள். வந்தனாவைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தான் காந்தன்.



''அன்று எங்களை உன் உடன் பிறந்தவர்கள் என்று கூறினாய். அதை நான் இன்று வரை மறக்கவில்லை. நீ செய்த உதவியையும் மறக்கவில்லை. இன்று நமது உறவை மேலும் பலப்படுத்த வந்திருக்கிறேன். நம் குழந்தைகளுக்கு சம்மதமானால், உன் மகளை எனது மருமகளாக்கிக் கொள்ள விரும்புகிறேன்!'' என்றாள்.

காந்தனுக்கு ஒரே மகிழ்ச்சி! மறுநாள் மணமக்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு திருமணத்திற்கு சம்மதம் தெரிவித்தனர். அப்போது வந்தனா அருணாவிடம், ''நான் உனது அத்தை. நீ என் மகனை உன் பெயராலேயே கூப்பிடு'' என்றாள். தன் மகனிடமும் அதையே கூறினாள். இருவரும் தங்கள் இருவருக்கும் ஒரே பெயராக இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டனர்.

இதைக் கேட்டதும் காந்தனுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. அவன் நாதழுதழுக்க வந்தனாவிடம், ''அன்று நீ என்னை பாக்கியசாலியாக மாற்றுவதற்கு உதவி செய்வாய் என்று வாக்களித்தாய். அதை இன்று நிறைவேற்றி விட்டாய். என் மகளும் மருமகனும் ஒருவரையொருவர் தங்கள் பெயரைக் கொண்டு கூப்பிடப் போகிறார்கள். இதை விட எனக்கு வேறு என்ன தேவை'' என்றான்.

இருவரது திருமணமும் வெகு விமரிசையாக நடந்தது. மறுநாளே காந்தனுக்கு காமேஸ்வரனிடமிருந்து அழைப்பு வந்தது. அவர் காந்தனிடம், ''இவ்வளவு நாள்கள் நீ என் வியாபாரத்தை நன்கு கவனித்துக் கொண்டாய். இனி நீ தனியாக வியாபாரம் தொடங்கு. அதற்கு உனக்கு என்ன உதவி வேண்டுமானாலும் நான் செய்து கொடுக்கிறேன்'' என்று கூறினார்.

இதைக் கேட்டதும் காந்தனுக்கு மிகவும் தர்ம சங்கடமாகி விட்டது. மாதவனின் சோதிடம் பொய்த்து விட்டது என்று எண்ணினான்.

வந்தனாவிற்கு இது தெரிய வந்ததும், ''காந்தா! இத்தனை ஆண்டுகள் காமேஸ்வரனிடம் வியாபாரத்தில் உதவியாளனாக இருந்திருக்கிறாய். இனி நீ தனியாக தொழில் தொடங்குவதற்கான நேரம் வந்துவிட்டது. எவனொருவன் தன்னிச்சையாக செயல் படுகிறானோ அவனுக்குத்தான் அதிருஷ்டமும் கை கொடுக்கும். நீ சொந்தமாகத் தொழில் தொடங்கு! கட்டாயம் உனக்கு வெற்றி கிடைக்கும் என்றாள்.

காந்தன் தன் தவறை உணர்ந்து கொண்டான். அவன் வந்தனாவிடம், ''சோதிடம் நம் எதிர்காலத்தைக் கணிக்கும் ஒரு குறிப்பு மட்டும்தான் என்பதை அறிந்து கொண்டேன். இனி என் வாழ்க்கையை நானே ஏற்படுத்திக் கொள்வேன். இந்த நல்ல தருணத்தை நான் நன்கு பயன்படுத்திக் கொள்வேன்'' என்றான்.

அதன் பிறகு வியாபாரத்தைத் தொடங்கி ஒரே வருடத்தில் நகரில் விரல் விட்டு எண்ணக் கூடிய பெரிய வியாபாரிகளில் அவனும் ஒருவனாகி விட்டான்.





# பயங்கரப் பள்ளத்தாக்கு

## 2

*(பிரம்மபுரி அருகிலிருந்த காட்டில் கேசவன் எனும் மாடு மேய்க்கும் சிறுவன் ஒருநாள் மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு விசித்திர மான மிருகம் அங்கே வந்தது. அந்த சமயத்தில் அங்கு வந்திருந்த பிரம்ம புரியின் சேனாதிபதி வந்திருந்த அந்த விசித்திர மிருகத்தைக் கண்டான். உடனே அவன் அதைத் தன்னிடம் இழுத்து வருமாறு தன் வீரர்களுக்கு உத்தரவிட்டான்.)*

சேனாதிபதியின் கட்டளையைக் கேட்டவுடன், வீரர்களில் ஒருவன் ஓடிப்போய் அந்த மிருகத்தைப் பற்றி சேனாதிபதியின் அருகில் இழுத்து வந்தான். அதைக் கண் கொட்டாமல் உற்றுப் பார்த்த சேனாதிபதி மிகவும் வியப்புடன், 'இது மிகவும் அதிசய மான மிருகம். இந்த அதிசய மிருகத்தை மன்னருக்குப் பரிசாக அளித்தால், கண்டிப்பாக மன்னர் என் மீது மிகவும் பிரியம் காட்டுவார்!' என்று நினைத்தான்.

பிறகு அவன் கேசவனைத் திரும்பிப் பார்த்து, ''திருட்டுப்பயலே! இதை எங்கிருந்து திருடினாய்? உண்மையைச் சொல்! இதுபோல் விசித்திர மிருகத்தை நீ மன்னரிடம் ஒப்படைத்திருக்க வேண்டும். ஏனென்றால் இது அரசாங்கச் சொத்து, இந்த விஷயத்தில் மன்னரின் ஆ ணையைப் ப ற்றி உனக்கு எதுவும் தெரியாதா?'' என்று மிரட்டினான்.

தன்னுடன் மு ரட்டுத்தனமாகப் பேசிய சே னாதிபதியின் மீ து



கேசவனுக்குக் கோபம் வந்தது. ஆனாலும் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு பணிவாக, ''ஐயா, இதை நான் திருடவில்லை. தற்செயலாக ஒருநாள் இந்த இடத்தில் இதை நான் பார்த்தேன். அன்றிலிருந்து இது என்னுடன் நன்றாகப் பழகி வருகிறது. என்னுடைய மாடு களுடன் சேர்ந்து அதுவும் தினமும் புல் மேய்கிறது. எனக்கு உங்கள் மன்னருடைய ஆணையைப் பற்றி எதுவும் தெரியாது,'' என்றான்.

''உனக்கு விஷயம் தெரியாது என்றால் போகட்டும், உன்னை மன்னித்து விடுகிறேன்!'' என்ற சேனாதிபதி, ''இந்த மிருகத்தை கட்டி இழுத்து வா'' என்று ஒரு வீரனிடம் சொல்லிவிட்டு, தன் குதிரையை செலுத்தியவாறு சென்றான். ஒரு வீரன் அந்த மிருகத்தின் கழுத்தில் கயிறைக்கட்டி, கயிறின் மறு முனையை தன்னுடைய குதிரையுடன் இணைத்து விட்டு, குதிரை மீதேறி மெதுவாகச் சென்றான். மற்றொரு வீரன் கேசவன் அருகில் வந்து, ''கேளடா மூடா! நான் அடுத்த முறை இந்தப் பக்கம் வரும்போது, இதே போல் இன்னொரு மிருகத்தையும் பிடித்து வை. நான் அதைக் கட்டிச் செல்கிறேன். புரிந்ததா? '' என்று மிரட்டிவிட்டுச் சென்றான். கேசவனுக்கு வந்த ஆத்திரத்தில் அவன் மீது அம்பெய்திக் கொன்று விடலாம் போல் தோன்றியது. ஆனால் பின்புறத்திலிருந்து தாக்குவது முறையல்ல என்று தோன்றியதால் சும்மாயிருந்து விட்டான்.

சேனாதிபதி தன் வீரர்களுடனும், அந்த அதிசய மிருகத்துடனும் அரண் மனையை நோக்கிச் செல்ல முற்பட்டான். செல்லும் வழி எல்லாம் பல கற்பனைக் கோட்டை களைக் கட்டிக் கொண்டே குதூகலத் துடன் சென்றான்.

'இந்த அதிசய மிருகத்தை ராஜா முன் கொண்டு சென்று நிறுத்துவேன். இதைப் பிடிப்பதற்காக நான் எத்தனை சிரமப்பட்டு போராட வேண்டி இருந்தது என்று என் கற்பனை எல்லாம் திரட்டி வர்ணிப்பேன். மன்னர் என் வீரதீரப் பராக்கிரமத்தைப் பாராட்டியும் அதிசய மிருகத்தை அவருக்கு அளித்ததைக் கண்டு மகிழ்ந்தும், எனக்குப் பெரிய பரிசு தருவார்' என்று நினைத்துக் கொண்டே சென்றான். கூடவே அவனுக்கு ஓர்

எண்ணமும் தோன்றியது. தான் ஒரு சாதாரண மாடு மேய்க்கும் சிறுவனை பயமுறுத்தி அதிசய மிருகத்தைக் கைப்பற்றி வந்த உண்மை அவருக்குத் தெரிந்தால் என் கௌரவம் மண்ணோடு மண்ணாகப் போகும். ஆகவே என் கூட வரும் முட் டாள்களை முதலில் எச்சரிக்க வேண்டும் என்றும் எண்ணினான்.

அதே ச மயம் பி ன்னாலிருந்து ஒரு வீரனின் கூக்குரல் கேட்டது. ''எசமானே! இது ஒரு ராட்சசக் குதிரை! ஐயோ! என்னையும் என் குதிரையையும் இது தன் கொம்பி னால் முட்டிக் கிழித்து விட்டதே!'' என்று கூ விக் ெ காண்டே ' ஓ எ ன அலறிக் கொண்டே மண்ணில் விழுந்தான். திடுக்கிட்ட சேனாதிபதி திரும்பிப் பார்த்தான். அவன் கண்ட காட்சி அவன் ரத்தத்தை உறையச் செய்தது. அவனுடைய வீரர்களில் ஒருவனும், அவனுடைய குதிரையும் ரத்தம் பீறிட துடித்துக் கொண்டே தரையில் கிடந்தனர். அரண்டு போன சேனாதிபதி, தன்னுயிரைக் காப்பாற்றிக் கொள்ள, தன் குதிரையை பாய்ந்து ஓடச் செய்தான். ஆனால் அந்த அதிசய மிருகம் ஒரே பாய்ச்சலில் குதிரையின் மீது பாய்ந்து தன் கொம்பினால் முட்டித் தள்ளியது. குதிரையிலிருந்து கீழே விழுந்த சேனாதிபதியையும் தன் கொம் பினால் குத்திக் கிழித்தது. 'ஓ' என்று அலறிய சேனாதிபதி ரத்தம் 'குபுக் ' 'குபுக்' எ ன்று பாய, தரையில் விழுந்து புரண்டு துடித்தான்.



''ஐயோ! காப்பாற்றுங்கள்! என்னைக் காப்பாற்றுங்கள்! இந்த ராட்சசக் குதிரை என்னைக் குத்திக் கிழித்து விட்டதே! நான் செத்தேன்! ஐயோ!'' என்று காடே அதிர அலறினான். துணைக்கு இருந்த மற்றொரு வீரன் சேனாதிபதிக்கு உதவுவதற்குப் பதிலாக, ''ஐயோ! ஐயோ! பிசாசுக் குதிரை! ராட்சசக் குதிரை!'' என்று அலறிக் கொண்டே அரண்மனையை நோக்கிச் சென்றான்.

வாயிலில் காவலனைக் கண்ட வீரன், ' 'அபாயம்! ஆபத்து ! ஒரு ராட்சசக் குதிரை நம் சேனாதிபதியைக் கொன்று விட்டது! குதிரைகளையும் கொன்று விட்டது. எல்லாரும் ஓடுங்கள்!'' என்று கத்தினான்.

உடனே கோட்டைக் காவலன் அவசரமாக மந்திரிக்குத் தகவல் அனுப்பினான். சேனாதிபதியை

கொம்புள்ள ஒரு ராட்சச மிருகம் காட்டில் கொன்று விட்டதாகவும் இரண்டு குதிரைகளையும் மற்றொரு வீரனையும் கூட கொன்று விட்ட தாகவும் சொல்லியனுப்பினான். மந்திரி உடனே தப்பித்து வந்த வீரனை தன் அறைக்கு அனுப்பு மாறு உத்தர விட்டார். அவனும் உடனே மந்திரியைச் சென்று சந்தித்தான். அவனிடம் மந்திரி, ''நடந்தது என்னவென்று நிதானமாகச் சொல்!'' என்றார். உடனே அவன் தாங்கள் காட்டிற்கு வேட்டையாடச் சென்றதில் இருந்து அதிசய மிருகம் யாவரையும் கொம்பினால் முட்டிக் கொன்ற வரை, அனைத்தையும் கூறினான். அதைக் கேட்டதும் மந்திரிக்கு கோபம் வந்தது.

''அடேய் முட்டாள்! சேனாதி பதியை அந்த மிருகம் தாக்கிய போது, நீ என்ன வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாயா? நீ ஏன் அதை கொல்லவில்லை?'' என்று கேட்டார்.

''கொல்வதா? சேனாதிபதியின் மேல் அது சீறிப் பாய்ந்த வேகத்தைக் கண்டு நான் பயந்து நடுங்கி விட்டேன். அந்த சமயம் உயிர் பிழைத்தால் போதும் என்று தோன்றியதால் தலை கால் தெரியாமல் ஒரே பாய்ச்சலில் வந்து விட்டேன்!'' என்று மூச்சு வாங்கக் கூறினான். ''ஓ! சரியான சூரன் நீ! சேனாதிபதி மீது அது பாய்ந்த வுடனே நீ ஓடி வந்து விட்டாயா? சேனாதிபதி கொல்லப்பட்டார் என்று எப்படி நிச்சயமாகச் சொல்கிறாய்?'' என்று மந்திரி கேட்டார்.

''ஐயா! அது பாய்ந்து முட்டி யதைப் பார்த்தால் சேனாதிபதி உயிர் பிழைப்பார் என்ற நம்பிக்கையே போய்விட்டது!'' என்றான் அவன்.

''அப்படியானால், அத்தகைய பயங்கர மிருகமா அது? யானையை விட பலசாலியா?'' என்று மந்திரி



கேட்க, ''இல்லை ஐயா! பார்ப்பதற்கு குதிரையை விடச் சிறியதாகவும், கழுதையை விடப் பெரியதாகவும் இருந்தது. முகத்தில் ஒரு கொம்பு இருந்தது!'' என்றான் அந்த வீரன்.

''சரிதான்! நீ ஏதோ உளறுகிறாய் என்று தோன்றுகிறது. நீ சொல்வது போல் ஓர் அதிசய மிருகத்தை இது வரை யாரும் கண்டதுமில்லை. நிச்சயமாக சேனாதிபதியை அது கொன்றிருக்க முடியாது. அதிருக் கட்டும்! அந்த மாடு மேய்க்கும் சிறுவன் எப்படி இருந்தான்? அவனுடைய செல்லப் பிராணியை நீங்கள் பிடித்து வந்ததனால் கோபங் கொண்டு அவன் சேனாதிபதியை பின்புறமிருந்து கத்தி வீசிக் கொன்றிருக்கலாமே!'' என்றார் மந்திரி.

தொடர்ந்து அவர், ''சரிசரி! நான் உன்னுடன் சில ஆட்களை அனுப்பு கிறேன். நீ அவர்களை அழைத்துக் கொண்டு காட்டிற்குச் சென்று அந்த மிருகம் இப்போது எங்கே, சேனாதிபதி என்ன ஆனார் என்பதை யெல்லாம் கண்டு பிடித்து வா!'' என்றார்.

மறுபடியும் அந்த மிருகத்தைத் தேடி காட்டிற்குச் செல்ல வேண்டும் என்பதைக் கேட்டவுடனே, அந்த வீரன் பயந்து நடுங்கினான். இருந் தாலும் மந்திரியின் கட்டளையை மீற முடியாமல், அவர் ஏற்பாடு செய்த சில ஆட்களுடன் காட்டை நோக்கிப் புறப்பட்டான்.

இதற்கிடையில் பிரம்மபுரியில் சேனாதிபதி கொல்லப்பட்ட செய்தி



காட்டுத்தீ போல பரவியது. கூடவே பலவித வதந்திகளும் தோன்றின. சேனாதிபதியைக் கொன்றது கொம் புள்ள ஒரு பயங்கர மிருகம் என்றும், அது அவனைக் கொம்பினால் குத்தி வானில் பல அடி உயரத்திற்கு எறிந்தது என்றும், வாய்க்கு வந்தபடி மக்கள் வதந்திகளைப் பரப்பினர். பிரம்மபுரிக்கு பால் விற்க வந்திருந்த கேசவனின் தந்தையும் இந்த வதந்தி களைக் கேட்டு கலவரம் அடைந்தார்.

ஒருநாள் இரவு கேசவன் ஓர் அதிசய மிருகத்தை தன் வீட்டிற்கே அழைத்து வந்திருந்தது அவருக்கு திடீரென ஞாபகம் வந்தது. 'அடக் கடவுளே! அந்த மிருகம் தான் சேனாதிபதியைக் கொன்று விட்டதோ' என்று எண்ணி அவர் நடுங்கினார். அந்த மிருகம் கேசவனையும் கொன்று விட்டதோ என்று திடீரென அவருக்குக் கவலை

உண்டாயிற்று. உடனே தன் வீட்டிற்குச் சென்று தன் மகன் பத்திரமாக இருக்கிறானா என்று பார்க்கத் தோன்றவே, அவர் அவசர மாக வீடு திரும்பலானார்.

வீட்டிற்கு வரும் வழியில் இன்னொரு வதந்தியும் அவர் செவி களில் விழுந்தது. அயல் நாட்டு ஒற்றன் ஒ ருவன் க ாட்டில் உ லவு வதாகவும், அவன்தான் சேனாதி பதியைக் கொன்றிருக்கக் கூடும் எனும் செய்திதான் அது. அவனைப் பிடித்து வ ர ம ந்திரி ப ல ஆட்களை அனுப்பியிருக்கிறார் எ ன்றும் தெரிந்தது. உடனே, 'ஒருவேளை அந்த ராட்சச மிருகமே கேசவனைக் கொன்றிருக்காவிட்டால் மந்திரியின் ஆட்கள் அவனை பிடித்துப் போவது என்னவோ நிச்சயம்!' என்ற தவிப்புடன் வீட்டை அடைந்த அவர், கேசவன் வீட்டில் இல்லை என்பதை அறிந்தார்.

உடனே வழக்கமாக கேசவன் மாடு மேய்க்கும் இடத்திற்கு விரைந்து சென்றார். தன் மகனின் பாது காப்பிற்காக ஒரு பெரிய வாளையும் எடுத்துச் சென்றார். காட்டில் வழக்க மாக கேசவன் இருக்கும் இடத்தில் அவனைக் கண்ட பின்புதான் அவருக்கு நிம்மதி ஏற்பட்டது. ஓடிச் சென்று அவனை நெஞ்சோடுத் தழுவிக் கொண்ட அவர், ''கேசவா! உன்னை உயிரோடு பார்ப்பேனா என்று தவித்துப் போய் விட்டேன்! நல்லவேளை, உனக்கு ஒன்றும் ஆக வில்லை!'' என்று விம்மி அழுதார்.

தன் தந்தையின் படபடப்பைக் கண்ட கேசவன் வியப்படைந்தான். பிரம்மபுரியில் நடக்கும் அமர்க் களங்கள், உலவும் வதந்திகள் ஆகியவை பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. ''என்ன நடந்தது அப்பா? ஏன் நீங்கள் பதற்றப் படுகிறீர்கள்? '' என்று கேசவன் கேட்டான்.

''நமது சேனாதிபதியை காட்டில் ஒரு ராட்சச மிருகம் கொன்று விட்டதாம்! பிரம்மபுரியில் ஒரே பரபரப்பு! ஆனால் சிலரோ, காட்டில் ஒளிந்துள்ள அயல் நாட்டு ஒற்றன் காட்டிற்கு வேட்டையாட வந்த சேனாதிபதியை கொன்றிருக்க வேண்டும் என்கின்றனர்!'' என்றார் கேசவனின் தந்தை. *(தொடரும்)*





நவீன வேதாளக் கதை

# இளவரசியின் கேள்வி

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழேயிறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''மன்னா, நிறைகுடம் த ளும்பாது என்ற சொல்லிற்கேற்ப, உலகின் பல விஷயங்களையும் கற்றுணர்ந்த அ றிஞர்கள் மிகவும் அடக்கமாக இருப்பார்கள். ஆனால் அவர்களில் சிலரோ, தங்கள் மதிநுட்பத்தின் மீது கொண்ட கர்வத்தால், அகம்பாவத்துடன் நடந்து கொள்வது உண்டு. அத்தகைய அகம்பாவம் பிடித்த இளவரசி



விலாசினியின் கதையை நான் இப்போது உனக்குச் சொல்கிறேன். சற்றே செவிமடுத்துக் கேள்'' என்றது.

மாணவ ராஜ்ஜியத்தை ஆண்டு வந்த பூபதி மன்னருக்கு ஒரேயொரு மகள் இருந்தாள். அவள் பெயர் விலாசினி. மகளின் மீது மிகவும் பிரியம் கொண்டிருந்த பூபதி, அவருக்கு சிறுவயது முதலே நல்ல தொரு ஆசிரியர் மூலம் அரண்மனை யிலேயே கல்வி போதிக்கச் செய்தார். விலாசினி பருவமடைந்தபின், உருவத்தில் அதிரூப சுந்தரியாக விளங்கியது மட்டுமன்றி, அறிவிலும் மிகவும் சிறந்து விளங்கினாள். இளவரசியின் புத்திசாலித்தனத்தைக் கண்ட அ வளுடைய ஆ சிரியர் கூடவே அவளுக்குத் தன் அறிவைப் பற்றி அகம்பாவம் வளர்ந்து வருவதையும் கண்டார். ஆகையால் அவளுக்கு சமமான இளவரசனை அவளேத் தேர்ந்தெடுத்து மணம் புரிவது நல்லது என்ற தன் கருத்தினை மன்னரிடம் தெரிவித்தார்.

மன்னரும் அதை ஒப்புக்கொண்டு சுயம்வரத்திற்கான ஏற்பாடு செய்தார். பல நாடுகளிலிருந்தும் இளவரசர்கள் வந்தனர். ஆனால் விலாசினி அறிவுப் பூர்வமாகக் கேட்கும் கேள்விகளுக்கு அவர்களால் பதில் சொல்ல முடிய வில்லை. விலாசினி அனைவரையும் திருப்பிஅனுப்பி விட்டாள்.

ஒருநாள் ருத்ரபுரியின் இளவரசன் திலீபன் விலாசினியை சந்திக்க வந்தான். திலீபன் நீராடி, புத்தாடைகள் புனைந்து வி ருந்து சாப்பிட்ட பின் விலாசினியை சந்திக்க அரண் மனைக்கு வந்தான். மன்னரும், பட்டத்து ராணியும் வீற்றிருக்க திலீபனும் அங்கே அமர்ந்திருந்தான். சற்று நேரத்தில் விலாசினி அங்கே வந்தாள். அவளுடைய அழகைக் கண்டு திலீபன் மெய் மறந்து போனான்.

அறிமுகத்திற்குப் பிறகு விலாசினி, ''நான் கேட்கும் கேள்விகளுக்கு சரியான பதில்கள் எப்படி இருக்க வேண்டும் என்று ஏற்கெனவே என் மனத்தில் கற்பனை செய்து வைத்து உள்ளேன். சரி யாக அதேபோல் நீங்கள் பதிலளித்தால் மட்டுமே, அவற்றை அங்கீகாரம் செய்வேன். என்னுடைய முதல் கேள்வி இதுதான்! உங்கள் ராஜ்ஜியத்திலுள்ள மக்கள் காக்கைகள் போன்றவர்களா அல்லது நாய்களைப் போன்றவர்களா? '' என்றாள்.

சிறிது நேரத்திற்கு பின், "காக்கைகள் போன்றவர்கள்தான்!'' என்றான்.

அதைக் கேட்டு முறுவலித்த விலாசினி அடுத்ததாக, ''நீங்கள் சந்திரவமிசத்தைச் சேர்ந்தவர், உங்கள் சுபாவம் சந்திரனைப் போல இருக்குமா?'' என்று கேட்டாள்.

அதற்கு, ''நான் சுபாவத்தில் சூரியனைப் போன்றவன்!'' என்றான்.

திலீபனின் பதிலைக் கேட்ட விலாசினி ''சபாஷ் இளவரசரே! என் கடைசிக் கேள்வி: ஒரு வீட்டில் வயதான தந்தை காட்டிற்குச் சென்றால் ஏன் எல்லாரும் மிகவும் வருந்துகின்றனர்?'' என்று கேட்டாள்.

''காட்டிற்குச் செ ன்றவர் இ னி மீண்டும் திரும்பி வரமாட்டார் என்று தவறாக எண்ணுவதால் வருந்து கின்றனர்!'' என்றான் திலீபன்.

''தவறாக எண்ணுவதாலா? '' என்று திலீபனிடம் கேட்ட விலாசினி, ''காட்டிற்குச் சென்றவர் மீண்டும் வீட்டிற்குத் திரும்புவாரா?'' என்றாள்.

''கட்டாயம் திரும்பி வருவார். ஆனால் அதே வீடாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை!'' என்றான் திலீபன்.

உடனே விலாசினி, தன் பெற்றோரை நோக்கி, ''இவர் என் கேள்விகளுக்கு சரியான பதில்களை சொல்லி விட்டார். இனி நீங்கள் தாராளமாக என் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யலாம்!'' என்று கூறி நாணித் தலை குனிந்தாள்.

தன் மகிழ்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாத மன்னர் திலீபனை கட்டி அணைத்துக் கொண்டார்.



இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம், ''இளவரசி மற்றும் இளவரசனின் கேள்வி பதில்கள் மிகவும் அறிவுப்பூர்வமாக இல்லாமல் செவிடன் மற்றும் ஊமை பாஷை போல் இருக்கிறது அல்லவா? எனது சந்தேகத்திற்கான பதில்கள் தெரிந்திருந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை சுக்கு நூறாகி விடும்'' என்றது.

உடனே விக்கிரமன், ''விலாசினி கேட்ட கேள்விகள் உண்மையிலேயே அறிவுப்பூர்வமான கேள்விகள்தான்! ஏனெனில் அவற்றின் உட்பொருள் வேறு! அவற்றை விளக்குகிறேன் கேள்!

விலாசினி திலீபனிடம் கேட்ட முதல் கேள்விக்கான உட்கருத்து, நாட்டு மக்கள் காக்கைகள் போல் பகிர்ந்துண்டு ஒற்றுமையாக வாழ்பவர்களா அல்லது நாய்களைப் போல் சண்டை சச்சரவுடன் காலம் கழிப்பவர்களா என்பதே! தனது நாட்டு மக்கள் ஒற்றுமை உணர்வு கொண்டவர்கள் என்பதை திலீபன் தனது பதிலால் உணர்த்தினான். இரண்டாவது கேள்வி, திலீபன் சந்திரனைப் போன்றவனா, அல்லது சூரியனைப் போன்றவனா என்பது! சந்திரனுக்கு சுய ஒளி கிடையாது. வளர்ந்து தேயும் தன்மை உடையது. சூரியன் என்றுமே ஒளி வீசி முழுமையாக இருப்பது! ஆகவே திலீபன் அவ்வாறு பதிலளித்தான். கடைசிக் கேள்வி, வயதானவர் இறந்தால் வருந்துவதேன் என்பதே பொருள். இறப்பு உடலுக்கு மட்டுமே, ஆத்மா அழிவதில்லை என்ற கருத்தைக் கூறினார். அப்படியெனில் இறந்தவர் அதே வீட்டிற்குத் திரும்புவாரா என்ற கேள்விக்கு, இறந்தவரின் ஆத்மா மறு பிறவி எடுக்கும் என்றும், ஆனால் அதே வீட்டிற்கு வரும் என்பது நிச்சயமில்லை என்றும் பொருள்பட திலீபன் பதில் அளித்தான். ஆகையால் அவர்களுடைய கேள்விகளும், பதில்களும் அறிவுப்பூர்வமானவைதான் என்று தெரிகிறது'' என்றான்.

விக்கிரமனது சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் தான் சுமந்து வந்த உடலுடன் மீண்டும் பறந்து சென்று முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.



# மர்மப் பாறை

**வ**ட அமெரிக்காவில் ஒரு கிராமத்தின் எல்லையில் ஒரு செங்குத்தான மிக உயரமான ஒரு பாறை இருக்கிறது. அந்தப் பாறையின் உச்சிக்கு ஏறுவது மிகவும் கடினம். ஒருமுறை, ஒரு மலையேறும் குழுவினர் எப்படியோ சிரமப்பட்டு கயிறுகளைக் கட்டி உச்சியை அடைந்து விட்டனர். ஆனால் அவர்களால் கீழே இறங்கவே முடியவில்லை. பிறகு ஒரு ஹெலிகாப்டரின் உதவியுடன்தான் இறங்க முடிந்தது.

ஆனால் இந்தக்கதை அவர்களைப் பற்றியதல்ல. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இரண்டு கிராமத்து சிறுவர்கள் வெற்றிகரமாக கீழே இறங்கி விட்டனர். ஆனால் அவர்கள் பாறையின் உச்சிக்குச் செல்லவே இல்லை. அப்படியென்றால் கீழே எவ்வாறு இறங்க முடியும் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? கதையைப் படித்துப் பாருங்கள்:

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், அந்தக் கிராமத்தில் வசித்த இரு சிறுவர்கள் ஒரு சிறு குன்றின் அருகில் பந்து விளையாடிக் கொண்டிருந்தனர். ஒருவன் பந்தை உயரத்தில் தூக்கி எறிய, அது குன்றின் மேல் போய் விழுந்தது. பந்தை எடுப்பதற்காக அவர்கள் அந்த குன்றின் மீது ஏறினர். குன்றின் உச்சியிலிருந்து, எதிர்ப்புறத்தை நோக்கிய அவர்கள் பிரமித்தனர். குன்றின் மறுபக்கத்தில் ஓர் அடர்ந்த காடு தென்பட்டது. அங்கே பல வகையான மரங்கள், பழங்களுடன் காணப்பட்டன. உடனே அவர்கள் குன்றிலிருந்து இறங்கி, காட்டை அடைந்தனர். அங்கு காணப்பட்ட மரங்களில்





மெதுவாக வீடு நோக்கிச் செல்வோம் என்று எண்ணிக் கொண்டே அவர்கள் புறப் பட்டபோது, திடீரென அவர்கள் முன் ஒரு பெரிய கரிய உருவம் தோன்றியது. அது ஒரு கரடி என்று அறிந்ததும், அவர்களுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆனால் கரடிக்கோ இரு சிறுவர்களைக் கண்டதும் பெருத்த மகிழ்ச்சி உண்டாயிற்று.

கரடி தன் பூதாகாரமான கைகளை விரித்துக் கொண்டு, அவர்கள் மீது பாயத் தயாரானது. இரு சிறுவர்களும் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, ''கரடியாரே! கடைசி முறை யாக கடவுளைப் பிரார்த்தனை செய்ய எங்களுக்கு அனுமதி கொடுங்கள்!'' என்றனர்.

இருந்து, பழங்களை எடுத்து சுவைத்தனர். பிறகு, மரங்களுக்கு இடையே கண்ணாமூச்சி விளை யாடிப் பொழுதைப் போக்கினர். அவ்வாறு விளையாடியதில் நேரம் சென்றதே அ வர்களுக்குத் தெரிய வில்லை. திடீரென சூரியன் மறைந்து, நாற்புறமும் இருள் சூழத் தொடங்கியதும்தான் அவர்கள் தங்கள் தவறை உணர்ந்தனர். நல்ல வேளையாக அன்று பௌர்ணமியாக இருந்ததால், நிலா வெளிச்சத்தில்

''ஹாஹ்ஹாஹ்ஹா!'' என்று பேய்ச்சிரிப்பு சிரித்த கரடி, ''தாராள மாக பிர ார்த்தனை செய்யுங்கள்! ஆனால் அந்தக் கடவுள் உங்களைக் காப்பாற்றுவார் என்று கனவு கூட காணாதீர்கள். நீங்கள் என்னிடமிருந்து தப்ப முடியாது'' என்றது.

அந்தச் சிறுவர்கள் பழங்குடி இனத்தினைச் சேர்ந்தவர்கள். அவர்கள் 'வங்கா தங்கா' என்ற கடவுளை வழி பட்டு வந்தனர். அந்தக் கடவுளை மனத்தில் துதித்துக் கொண்டே,

‘கடவுளே! எப்படியாவது இந்தக் கரடியிடமிருந்து காப்பாற்றுங்கள்!’ என்று கண்களில் நீர்பெருக பிரார்த்தனை செய்தனர்.

அவர்கள் வழிபடும் கடவுளான வங்கா தங்காவின் செவிகளை அவர்களுடைய பிரார்த்தனை எட்டியது. திடீரென அவர்கள் நின்றிருந்த இடம் தரைமட்டத்தில் இருந்து கிடுகிடுவென உயரத் தொடங்கியது. சிறுவர்கள் நின்று இருந்த இடம் ஒரு பாறையாக மாறி, பாறை உயர உயர வளர்ந்து கொண்டே சென்று, இறுதியில் மிக உயர மான பாறையாக மாறியது. சிறுவர்கள் இருவரும் பாறையின் உச்சியில் நிற்க, கரடியால் அவர்களை ஒன்றுமே செய்ய முடியவில்லை. சலிப் படைந்த கரடி அவர்களை விட்டுச் சென்று விட்டது.

கரடியிடம் இருந்து தப்பித்த சிறுவர்கள் பாறையின் உச்சியிலிருந்து எவ்வாறு இறங்குவது என்று திகைத்தனர். ஆனால் கடவுள் அதற்கும் வழி செய்தார். கடவுளின் கருணையினால், ஒரு கழுகு அவர்களை தனது அலகில் தூக்கிக் கொண்டு பத்திரமாக அவர்களுடைய கிராமத்தில் விட்டு விட்டது.

கிராமத்திலுள்ள அனைவருக்கு தங்களுக்கு நிகழ்ந்த அற்புதமான அனுபவத்தைக் கூறிய சிறுவர்கள், அந்த மர்மப் பாறையையும் அவர்களுக்குக் காட்டினர். கிராமத்தினர் அனைவரும் அந்த மர்மப் பாறையை பக்தியுடன் கும்பிட்டனர். இந்த நிகழ்ச்சி நடந்து முடிந்து, சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர், வெள்ளையர்கள் அந்தப் பகுதிகளைக் கைப்பற்றினர். வெள்ளையர்கள் அந்த மர்மப்பாறையை பேய்ப்பாறை என்று அழைக்கின்றனர். புனிதமான அந்தப் பாறையை ஏன் பேய்ப்பாறை என்று வெள்ளையர்கள் அழைக்க வேண்டும் என்று அங்குள்ளவர்களுக்குப் புரியவில்லை. அவர்கள் அதை கரடிப்பாறை என்று பயபக்தியுடன் குறிப்பிடுகின்றனர்.





# குழந்தைகள் பக்கங்கள்



கார்த்திக் பூஷன்,
உடுப்பி.

## சிறந்த உதவி எது?

பல ஆண்டுகளுக்கு முன், ஒரு கிராமத்தில் அருண், ஆதித்யா என்ற இரு சகோதரர்கள் வசித்து வந்தனர். சிறு வயது முதலே அனாதையான அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் மிகவும் ஒற்றுமை யுடனும், பாசத்துடனும் இருந்து வந்தனர். சிறு வயது முதல், அவர்கள் மீன் பிடித்து வியாபாரம் செய்து வாழ்க்கை நடத்தி வந்தனர்.

ஒருநாள் அவர்களுக்கு அதிக அளவில் மீன்கள் கிடைத்தன. இருவரும் வீட்டிற்கு மகிழ்ச்சியுடன் சென்று, அன்று பிடித்த மீன்களில் சிலவற்றை தீயினில் வாட்டிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்கள் வீட்டுக் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டு, மூத்தவனான அருண் கதவைத் திறந்தான். ஒரு பிச்சைக்காரன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். அவன் மீது இரக்கம் கொண்ட அருண், வாட்டிய மீன் ஒன்றை அவனுக்கு உண்ண அளித்தான். பிச்சைக்காரன் அவனுக்கு நன்றி கூறிவிட்டு மகிழ்ச்சியுடன் சென்றான்.

மறுநாள் அதே பிச்சைக்காரன் மீண்டும் அவர்களுடைய வீட்டிற்குப் பிச்சை கேட்டு வந்தான். அந்த சமயம் அருண் வீட்டில் இல்லாததால், ஆதித்யா கதவைத் திறந்தான். பிச்சைக்காரனைக் கண்டதும் அவன் மீது கோபங்கொண்டு அவனை திட்டிய ஆதித்யா, பிறகு வீட்டிற்குள் சென்று தூண்டிலை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான். வீட்டுக் கதவைப் பூட்டி விட்டு, பிச்சைக்காரனை கையைப் பற்றி இழுத்துக் கொண்டு, ஒரு பெரிய குளத்தை அடைந்தான். பிச்சைக்காரனின் கையில் அந்தத் தூண்டிலைக் கொடுத்து, "இதோ, இந்தத் தூண்டிலைப் பிடி. ஊசியின் முனையில் இந்தப் புழுவைச் செருகு. பிறகு தூண்டிலைத் தண்ணீரில் விட்டு, மீன் பிடி!'' என்று மீன்



பிடிக்கக் கற்றுத் தந்தான். பிறகு, "இனிமேல் நீ இவ்வாறு பிச்சை எடுக்காதே! உழைத்து சாப்பிடக் கற்றுக் கொள்!" என்று கூறி விட்டு வீட்டிற்குத் திரும்பினான்.

சில ஆண்டு களுக்குப் பிறகு, அந்த கிராமத்திற்கு ஒரு மிகப் பெரிய பணக்கார வியாபாரி ஒருவர் விஜயம் செய்தார். அவருடைய இரக்க மற்றும் உதவும் குணத்தைப் பற்றி அறிந்திருந்த கிராமத்தினர், அவர் தங்களுடைய கிராமத்திற்கு ஏன் வருகிறார் என்று அறிய ஆவலாயிருந்தனர்.

அவர்கள் எதிர்பார்த்துக் காத்திருக் கையில், வியாபாரி குதிரைகள் பூட்டிய தங்க ரதத்தில் அமர்க்களமாக வந்து இறங்கினார். கிராமத்து மக்கள் அனைவரும் அவரைக் காண கூடியிருந்தனர். அருணும், ஆதித்யாவும் கூட அந்தக் கூட்டத்தில் இருந்தனர். அவருடைய ரதம் ஆதித்யாவின் அருகில் வந்து நின்றது. வியாபாரி இறங்கி வந்து ஆதித்யாவை வணங்கி, "ஐயா, என்னை நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

ஆதித்யா தயக்கத்துடன், "நான் உங்களைப் போன்ற மிக பணக்கார வியாபாரியை என் வாழ்நாளில் பார்த்த ஞாபகம் இல்லையே!" என்றான்.

அந்த வியாபாரி சிரித்துக் கொண்டே, "எனக்கு அன்றொரு நாள் மீன் பிடிக்கக் கற்றுக் கொடுத்தீர்களே! அந்த ஏழைப் பிச்சைக்காரன் நான்தான்! நீங்கள் கற்றுக் கொடுத்த தொழிலை வைத்துக் கொண்டு தான் நான் இன்று பணக்கார வியாபாரியாக மாறியுள்ளேன். அதற்காக எனது இந்த சிறிய அன்பளிப்பை ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்று கூறி ஒரு பை நிறைய தங்க நாணயங்களை அளித்தார்.

ஆதித்யா மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினான். ஆனால் அருண் வாட்ட மடைந்தான். அவன் வியாபாரியை நோக்கி, "என்னை ஏன் மறந்து விட்டீர்கள்? பசியுடன் வந்த உங்களுக்கு நானல்லவா உணவளித்தேன்! என்னை விட்டுவிட்டு ஆதித்யாவிற்கு பரிசளித்து இருக்கி றீர்களே!" என்று கேட்டான்.

அதற்கு அந்த வியாபாரி, "நீங்கள் எனக்கு ஒரு நாள் உணவுக்குதான் வழி செய்தீர்கள். ஆனால் உங்கள் தம்பி நான் வாழ்நாள் முழுதும் உண்பதற்கான சரியான வழியை காட்டினார். உங்களையும் நான் மறக்கவில்லை. இந்த தங்க நகையைப் பெற்றுக் கொள்ளுங்கள்!" என்று கூறி அருணுக்கு ஒரு தங்க நகையைக் கொடுத்தார். மறுபடியும் இருவருக்கும் நன்றி கூறிவிட்டு விடை பெற்றார்.

தனது தம்பி செய்த உதவி தன்னுடைய உதவியைவிட எத்தனை சிறந்தது என்று அருண் புரிந்து கொண்டான்.



# நியாயமான தீர்ப்பு



கே.சிநேகா,
ஹைதராபாத்.

சாந்திபுரத்தில் ராமன், பீமன் என்ற இரு விவசாயிகள் இருந்து வந்தனர். அவர்களுடைய வயல்கள் அருகருகே இருந்தன. ராமனுக்கு சிறிதளவு நிலமே சொந்தம். ஆனால் அவன் மிகவும் நேர்மை யானவன். நல்லவனும் கூட! கிராமத்தினா் அவன் மீது நல்ல மதிப்பு வைத்திருந்தனர். பீமன் ஏராளமான நிலங்களுக்குச் சொந்தக் காரன். ஆனால் பேராசை பிடித்தவன்.

ராமன் ஒருநாள் தன் வயலை உழுது கொண்டே, ''கடவுளே, எத்தனை நாள் நான் இவ்வாறு வறுமையில் வாடுவேன்! எனக்குச் சிறிது கருணை காட்டு!'' என்று கூறினான். அப்போது அவனுடைய ஏர் ஒரு கல்லினால் தடைப் பட்டது. அந்தக் கல்லை அப்புறப் படுத்திய ராமன் அதற்கடியில் ஒரு செப்பு பாத்திரத்தில் பழைய காலத்து தங்க நகைகள் இருப்பதைக் கண்டான் 'ஆகா! இறைவன் என் பிரார்த்தனைக்கு செவி சாய்த்து விட்டார்' என்று மகிழ்ச்சியுடன், அந்தப் பாத்திரத்தை தன் வீட்டிற்கு எடுத்துச் செல்ல முயலும் போது அதை பீமன் பார்த்து ''அட! இவையெல்லாம் என் தாயாருடைய நகைகள் அல்லவா? பல ஆண்டுகளுக்கு முன் என் வீட்டிலிருந்து இவை காணாமற் போய்விட்டன. கடைசியில் இங்கே புதைந்திருக்கின்றன. சரி, இவற்றையெல்லாம் நான் எடுத்துச் செல்கிறேன்!'' என்று கூறி அவற்றை எடுத்துச் செல்ல முயற்சித்தான்.



ராமன் அவனைத் தடுத்து நிறுத்தி, ''ஏனப்பா பொய் சொல்கிறாய்? உன் தாயாரின் நகைகள் எப்படி என் வயலுக்குள் புதைந்துஇருக்க முடியும்? இவை என் வயலில் கிடைத்தன. ஆகவே இவை எனக்குத்தான் சொந்தம்,'' என்று கூறினான். பீமன் கோபம் கொண்டவனைப் போல் நடித்து, ''இவை என்னுடையவை! வா, பஞ்சாயத்திற்குச் சென்று நீதி கேட்போம்!'' என்று ராமனைக் கூட்டிக் கொண்டு பஞ்சாயத்துத் தலைவரிடம் சென்றான்.

பஞ்சாயத்துத் தலைவர் இருவருடைய வாதங்களையும் கேட்டார். ராமன் நேர்மையானவன் என்றும், பொய் பேச மாட்டான் என்றும் அவருக்குத் தெரியும். அதேபோல் பீமன் பேராசைக்காரன் என்றும், பொய் பித்தலாட்டங்கள் செய்பவன் என்றும் அவருக்குத் தெரியும். ஆனால் அவருக்கு உடனடியாகத் தீர்ப்பு கூற முடியவில்லை. இருவரையும் மறுநாள் வருமாறு கூறி அனுப்பினார்.

மறுநாள் ராமனும், பீமனும் பஞ்சாயத்துத் தலைவர் முன் நின்றனர். அவர் கூறப்போகும் தீர்ப்பைக் கேட்க, கிராமத்தினர்கள் அனைவரும் அங்கே கூடிஇருந்தனர். பாத்திரத்தைத் திறந்த பஞ்சாயத்துத் தலைவர், உள்ளே இருந்த நகைகளைப் பார்த்துக் கொண்டே, ''இவை உண்மையில் யாருக்கு சொந்தம் என்பதை...'' என்று சொல்ல ஆரம்பிக்கும் போது திடீரென அங்கே மன்னரின் காவலர்கள் இருவர் குதிரையில் அமர்ந்து அங்கே வந்தனர். அவர்கள் பஞ்சாயத்துத் தலைவரைப் பார்த்து, ''மகாராஜா பக்கத்திலுள்ள காட்டில் வேட்டையாட வந்துள்ளார். உங்களை அங்கே அழைத்து வரச் சொன்னார்...'' என்று கூறியவர்களின் கண்களில் அந்த நகைகள் பட்டன.



உடனே அவர்கள் கீழே இறங்கி வந்து அந்த நகைகளை சோதித்தனர். பிறகு இருவரும் ஒரே குரலில், ''அடடே! இவை மகாராணியின் நகைகள் அல்லவா? திருட்டுப் போன இந்த நகைகள் உங்களுக்கு எப்படி கிடைத்தன?'' என்று அதிகாரக் குரலில் கேட்டனர். பஞ்சாயத்துத் தலைவர் முழு விவரங்களையும் அவர் களுக்குக் கூறினார்.

அவர் சொன்னதைக் கேட்டதும், மன்னரின் காவலர்கள் சீற்றம் அடைந்தனர். ''அப்படியானால் இருவரும் சேர்ந்து மகாராணியின் நகைகளை திருடி இருக்கின்றனர். இவர்களை நாங்கள் இழுத்துச் சென்று சவுக்கால் அடித்து சிறையில் தள்ளப் போகிறோம்!'' என்றனர்.

உடனே பீமன் அவர்கள் காலடியில் வீழ்ந்து ''ஐயோ, என்னை ஒன்றும் செய்யாதீர்கள்! இந்த நகைகள் ராமனுடைய வயலில் கிடைத்தன. இவை என்னு டையவை அல்ல. இவை ராமனுடைய நகை தான்! இவனை இழுத்துச் செல்லுங்கள்!'' என்று கதறினான்.

''சபாஷ்!'' என்ற பஞ்சாயத்துத் தலைவர், ''பீமா! இப்போது உன் வாயாலேயே உண்மையினை ஒப்புக் கொண்டாயா? உண்மையை வரவழைக்க நான் போட்ட நாடகம் இது. நீ வேண்டு மென்றே ராமனது நகைகளுக்கு ஆசைப் பட்டு அவற்றைக் கைப்பற்ற நினைத்தற் காக, உனக்கு நூறு பொற்காசுகள் அபராதம் விதிக்கிறேன். இனி இவ்வாறு மோசடி செய்ய நினைக்காதே!'' என்று தீர்ப்பு சொல்லிவிட்டு, நகைகளை ராமனிடம் கொடுத்தார்.

# THE ADVENTURES OF G-man

# அன்ட்ரோமேனியா ரெப்டிலியா பகுதி 2

இதுவரை நடந்த கதை : மற்ற பிரபஞ்சத்தில் உள்ள ஜீ-மென்னை தேடிக் கண்டுபிடிக்கும் முயற்சியில் இருக்கும் ஜீ-மேன், பெண்கள் ஆளும் ஒரு உலகத்தில் சென்றடைகிறான். அங்கு ஜீ-மேன் இருப்பதைப் பற்றி சந்தேகப்படும்போது, அந்த உலகத்தின் ஜீ-மேன் ஒரு ராட்சசனுடன் சண்டை போட வருகிறான். அது மட்டுமல்ல, அவனைப் பார்த்தால் அவன் ஏதோ மாதிரி தோற்றமளிக்கிறான்....




* வெளிப்புற நட்சத்திர மண்டலத்தில் உள்ள ஜூராக்ஸ் கோளில் வசிக்கும் மனிதர்கள். இந்த கோள பூமியைப் போல் இருந்தாலும், அங்கு டைனோசர்ஸ் பிராணிகள் இன்னமும் உயிருடன் வாழ்ந்து வருகின்றன...

அதை பின்னால
செய்யலாம். ஆனா இது
நம்பமுடியாதபடி இருக்கு...
நான் உன்ன இங்கே
எதிர்பார்க்கல்ல சுஜாதா...
அதுவும் ஜீ-உமனா...

நீ என்ன சொன்ன?
அத திரும்பவும் சொல்லு...
என் பேர் எப்படி உனக்கு தெரிஞ்சுது?
நீ எந்த ஒரு கோள்லேந்து வந்திருக்கே?

அந்த காரை நீ தூக்கறத
நான் பாத்தேன், நீ ஒரு
பொண்ணு மாதிரி
சண்டை போடறே..!


ஹூம்... நீ புகழ்ந்து பேசினதுக்கு ரொம்ப நன்றி. ஆனா அது ஒரு பெரிய கதை.


சரி... கதைய சின்னதா பண்ணிடு... இந்த ராட்ச்சன் என் உலகத்தை அழிக்கறதுக்குள்ள, சீக்கிரம் கதைய சொல்லு...


இதுதான் என் கதை...

பிறகு...

அப்ப நீ ஒரு மனுஷனைத் தேடிகிட்டு வந்தே... அதுக்கு பதிலா நான் கெடச்சேன்... இல்லையா?

இப்ப எனக்குப் புரியுது உன் முகத்துல தோணற கவலைலேந்து... ரொம்ப ஆச்சரியமா இருக்கு அதோடு நம்ப முடியாதபடியும் இருக்கு... இந்தப் பூச்சியை எப்படி சமாளிக்கறதுன்னு இப்ப நீ சொல்லு....

இந்தப் ''பூச்சிய'' சமாளிக்கறதுக்கு எங்கிட்ட இருக்கு ஒரு வழி.... இது ஒரு ஜூராக்ஸியன், வேறொரு கோள்லேந்து வந்திருக்கு... அதக் கொல்ல முடிலைனா, அது எங்கேந்து வந்திருக்குதோ அங்கேயே அத அனுப்பிச்சுட்டா போச்சு... எப்படி?

அபப்டீன்னா நாம வந்து அதோட அம்மாவைத் தேடிக் கண்டுபிடிக்கணும்னு சொல்றியா?

அப்படி ஒண்ணுமில்ல...

ஆம்பிளைங்களுக்கு
நான் 'ஜோக்'
பண்ணினாலும்
புரியறதில்லை...

நீ என்ன சொல்றேன்னு
எனக்குப் புரியது...
ஜூராக்ஸ் கோளை நோக்கி
அதை ஒரு மிகப் பெரிய விசை
சக்தியிலே வீசி எறியணும்...
அப்படிதானே?

ஹூம்...
ஆமா அது
மாதிரிதான்

அப்ப நாம ரெண்டு
பேரும் அதப் பண்ண
ஆரம்பிச்சுடுவோம்... நம்ம
சக்தியெல்லாம் உபயோகிச்சு
அதோட வீட்டுக்கு அனுப்ப
முயற்சி பண்ணுவோம்...
ரெடியா?

எப்ப
பண்ணணும்னு
சொல்லு...

ஒண்ணு...

ரெண்டு...

இதோ
மூணு...

சுகமா
போயிட்டுவா!

அப்புறம் அங்கே
போயி சேந்தப்புறம்
கடுதாசு போட
மறந்துடாதே...


ஏய்... ஏய்.... நீ ரொம்ப வேடிக்கையா இருக்கே...
என்ன... ஒரு மனுஷனா இருக்கறதுக்கா?
அப்படி ஒண்ணும் நான் சொல்லலையே
பின்னே என்னவாம்... உன் பேச்சிலேந்து அப்படித்தான் தோணிச்சு!


அப்படி எல்லாம் நெனக்காதே.
பொம்பளைங்களே இப்படிதான்!
திரும்பவும் அந்த வார்த்தைய நீ சொன்னேன்னா, உன் மூஞ்சிலே விழும் என் குத்து...
ஏய்! உடனே ஆரம்பிச்சுட்டிலே உன் பலத்தைக் காட்ட?


ஆமா.... பின்னே என்னவாம்! நீ தான் கேக்குறே அத!




# FIND THE HIDDEN WORDS

| A | E | R | T | G | D | G | M | A | N | G | H | J | P |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| T | E | R | R | O | L | E | N | E | S | D | F | J | A |
| G | H | H | M | H | F | R | J | U | K | L | G | A | R |
| R | E | D | I | A | R | D | N | I | M | G | L | D | L |
| G | H | J | T | B | N | C | O | R | V | X | U | V | E |
| M | U | F | K | P | A | S | T | Q | P | T | G | U | G |
| M | A | N | T | C | M | N | L | R | D | G | G | H | J |
| A | F | J | U | A | O | N | E | U | R | A | A | L | U |
| C | V | V | J | G | H | K | E | I | K | L | U | Y | J |
| Q | W | O | G | R | F | Z | T | X | Z | D | C | B | M |
| B | R | O | E | H | T | S | T | T | H | O | M | A | S |
| Y | U | H | E | F | G | M | G | U | G | J | U | I | O |
| R | E | D | B | L | U | E | G | R | E | E | N | H | N |
| R | N | B | F | B | M | K | L | U | R | F | O | P | H |
| I | U | Y | G | D | D | T | G | H | W | S | D | R | J |



1. Master of Darkness
2. G-Man's Power Supply
3. The Hero
4. G-Man's Companion
5. The machine that stole childrens mind
6. Terrolene's suit is made of this
7. Suryaraj's rank in the army
8. G-man's power beams
9. The Water Monster
10. The school where the major teaches
11. What the major teaches at school
12. The villian who stole childrens minds




POWER SUPPLY FOR




Visit: www.parleproducts.com

PARLE

# CROSSWORD





**Across**

1. Suryaraj teaches in this school ____________
2. Terrolene has an army of evil ____________
3. Power supply for G-man ____________

**Down**

1. The desert where the gateway to other dimensions is ________
2. G-man goes in search of the other ____________
3. G-man goes through the portal to enter into a parallel ________
4. Major Suryaraj was in the Indian ____________

கடந்த ஆண்டுகளைப் போல், தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளுக்கு சித்திரம் தீட்டுவதற்காக ஓவியப்போட்டியில் பரிசு பெற்றவர்களை இந்த ஆண்டு சென்னைக்கு அழைக்க முடியாமல் போனதற்கு வருந்துகிறோம். பரிசு பெற்ற ஓவியங்களை மட்டும் இங்கே வெளியிட்டு இருக்கிறோம். போட்டியில் பரிசு பெற்ற ஆறு நேயர்களுக்கு எங்கள் வாழ்த்தினைத் தெரிவித்துக் கொள்கிறோம். பரிசுகள் விவரம் பின்வருமாறு: முதல் பரிசு ரூ300, இரண்டாம் பரிசு ரூ 250, மூன்றாம் பரிசு ரூ 200, ஆறுதல் பரிசுகள் தலா ரூ 150.





நேஹா அடிகா,
பெங்களூர்.





ப்ரீதி எம். சேத்,
பெங்களூர்.





ராகினி ரவி,
கோயம்புத்தூர்.

# ஒரு கோடைக்கால சனிக்கிழமை





ஷ்ரத்தா மகாதிக்,
பெங்களூர்.

கோடைக்கால விடுமுறை தொடங்கி விட்டிருந்தது. ஒருநாள் அதிகாலை வேளையில், அழகான கனவொன்று கண்டபின், விழித்தெழுந்தேன். ஹாரி பாட்டர் கதையைப் பற்றிய கனவு என்பதைத் தவிர, கனவின் மற்ற நிகழ்ச்சிகள் எதுவும் நினைவிற்கு வரவில்லை. எழுந்த பிறகு அன்று சனிக்கிழமை என்று தெரிந்து கொண்டேன். அன்றைய தினத்தை எவ்வாறு கழிக்கலாம் என்று யோசனை செய்து கொண்டே, பல் துலக்கச் சென்றேன்.

பற்பசைக் குப்பியின் கீழ் ஒரு துண்டுக் கடிதம் செருகப்பட்டிருந்தது. ''ஷ்ரத்தா, நாங்கள் வெளியே செல்கிறோம். டைனிங் டேபிளுக்குச் சென்று பார். அம்மா'' என்ற வாசகங்கள் காணப்பட்டன. பல் துலக்கிய பிறகு, டைனிங் டேபிளை நாடிச் சென்றேன். அங்கு ஒரு மிகப் பெரிய கடிதம் அம்மாவால் எழுதப்பட்டிருந்தது. அன்று நான் வீட்டில் செய்ய வேண்டிய வேலைகளின் பட்டியல் அது என்று தெரிந்தது. நான் ஜாலியாக அன்றைய தினத்தைக் கழிக்கலாம் என்று போட்டுஇருந்த திட்டங்கள் எதுவும் நிறைவேறாது என்று அந்தப் பட்டியலைப் பார்த்ததுமே புரிந்தது. பட்டியலில் குறிப்பிட்டிருந்த முதல் வேலை துணி துவைக்கும் இயந்திரத்தை இயக்குவது. துணிகளையெல்லாம் அதனுள் போட்டு இயந்திரத்தை இயக்கினேன்.

சரி, இன்று எங்கும் ஊர் சுற்ற முடியாது என்று தெரிந்து கொண்ட நான், என் சிநேகிதி ஒருத்தியை என் வீட்டிற்கு வருமாறு தொலைபேசியில் அழைப்பு விடுத்தேன். திடீரென அழைப்புமணி ஒலித்தது. அதை எடுத்தவுடன் எனக்குப் பழக்கமான குரல் ஒன்று என்னை பால்கனிக்குச் சென்று பார்க்கக் கட்டளை யிட்டது. தன்னை யாரென்று சொல்லாமல் இவ்வாறு யாரோ கட்டளையிடுவதால் ஏற்பட்ட எரிச்சலில், ஒலி வாங்கியை கோபத்துடன் 'டங்' என்ற ஒலியுடன் கீழே வைத்தேன்.

முரட்டுத்தனமாக நான் ஒலி வாங்கியைக் கீழே வைத்தவுடன், எங்கள் வீட்டு தொலைக் காட்சி தானாக இயங்க ஆரம்பித்து விட்டது. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. தொலைக் காட்சியில் ஒரு பயங்கர உருவம் தன் ஆந்தை விழிகளைக் காட்டி என்னை பயமுறுத்தியது. பயந்து போன நான், தொலைக்காட்சியை



அணைக்க முயலுவதற்குள், அது தானாகவே அணைந்தது. எனக்கு ஒரே குழப்பம்! ஏதோ மர்மமான நடவடிக்கைகள் என்னைச் சுற்றி நடப்பதாக உணர்ந்தேன்.

பிறகு என்னை தைரியப்படுத்திக் கொண்டு, சிற்றுண்டி உண்ணத் தொடங் கினேன். திடீரென என் அண்ணனின் அறையிலிருந்த மியூசிக் சிஸ்டத்திலிருந்து ஒரு மர்மமான குரல் என்னை பெயர் சொல்லி அழைத்தது. அவனுடைய அறையை நோக்கி பயந்து கொண்டே சென்றேன்.

அறைக் கதவைத் திறந்தவுடன், நான் கண்ட காட்சி என்னை ''ஐயோ!'' என்று பயத்தில் அலற வைத்து விட்டது. அங்கே ஒரு செத்துப்போன காக்கா தரையில் பரிதாபமாக விழுந்திருந்தது. அதன் உடலில் மஞ்சள், குங்குமம் தடவப் பட்டிருந்தது. காக்காவின் அருகில் இரண்டு மண்டையோடுகளும், சில எலும்புகளும் என்னை குலை நடுங்க வைத்தன. அப்படியே வேரறுந்த மரம் போல் மயங்கி விழுந்தேன்.

எத்தனை நேரம் அவ்வாறு மயங்கிக் கிடந்தேனோ தெரியவில்லை! வாசலில் யாரோ கதவைத் தட்டினார்கள். சமாளித்துக் கொண்டு எழுந்து, கதவைத் திறந்தால், வெளியில் யாருமேயில்லை. ஒரு பார்சல் மட்டும் தரையிலே வைக்கப்பட்டிருந்தது. இன்னும் என்ன அதிர்ச்சிகள் காத்திருக் கின்றனவோ என்று நடுங்கிக் கொண்டே அதைப் பிரித்தேன். நான் பயந்ததற்கு மாறாக, பார்சலுக்குள் ஒரு புத்தகம் இருந்தது. அதன் முதல் பக்கத்தில், ''ஷரத்தாவிற்கு அன்புப் பரிசு'' என்று எழுதியிருந்தது.

அந்தப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினேன். சாளரம் வழியே, யாரோ சிலர் என் வீடு நோக்கி வருவதை உணர்ந்தேன். யாரென்று பார்க்கக் கதவைத் திறந்தால், அவர்கள் சாட்சாத் என் அம்மாவும், அப்பாவும், அண்ணனும் தான்! மூவரும் என்னைப் பார்த்து குறும்புச் சிரிப்பு சிரித்தனர். மூவரும் ஏதோ சாதித்து விட்டதாய் நமுட்டு சிரிப்பு சிரித்தனர்.

அப்போதுதான் எனக்கு திடீரென்று ஞாபகம் வந்தது. 'ஆகா! இன்று ஏப்ரல்



முதல் தேதி! முட்டாள்கள் தினம்!' எனக்கு எல்லாமே சிறிது சிறிதாக புரிய ஆரம்பித்தன. செத்துப் போன காக்கா டாக்டரான என் அப்பா ஏற்பாடு செய்தது என்றும், மற்ற விஷமங்களை என் அறிவாளி அண்ணன் செய்திருக்கிறான் என்றும், இவை எல்லாவற்றிற்கும் என் அம்மாவும் உடந்தை என்றும் தெரிய வந்தன.

'இருக்கட்டும், இவர்களை அதேபோல் எனக்குப் பழிவாங்க ஒரு சந்தர்ப்பம் வராமலா இருக்கப் போகிறது' என்று மனத்திற்குள் கறுவிக் கொண்டேன்.

# சிறுவர்களைப் பற்றிய செய்திக்குறிப்புகள்

## சிறுமியின் சாதனை



அமெரிக்காவில் வசிக்கும் ஒரு இந்தியக் குடும்பத்துச் சிறுமியான காவ்யா விஸ்வநாதனின் எழுத்துத் திறமையை தினசரி செய்தித் தாள்களிலும், பள்ளியின் இதழ் களிலும் கண்டு வியந்த ஒரு புத்தக பதிப்பகத்தார் அவளை இரண்டு நாவல்கள் எழுதித் தருமாறு கேட்டுக் கொண்டுள்ளனர். அதற்காக அவர்கள் காவ்யாவிற்கு அளித்த முன்பணம் மட்டும் ஐந்து லட்சம் டாலர்கள் (ரூ2.2 கோடி). நாவல்களை எழுதி முடித்ததும், அவளுக்கு மற்றொரு பெருந்தொகை காத்திருக்கிறது. முதல் நாவலுக்கான கையெழுத்துப் பிரதியை ஏற்கெனவே எழுதி முடித்து அவள் தந்து விட்டாள். ஒரு சிறுமிக்கு நாவல் எழுதக் கொடுத்த இந்தக் தொகை மிகமிக அதிகம் என்று கருதப்படுகிறது.

## விளையும் பயிர் முளையிலே...

சிறுவர்களிலேயே அதிபுத்திசாலித்தனமான சிறுவனைத் தேர்ந்தெடுக்க பிரிட்டானியா இந்தியா நிறுவனத்தார் சித்தார்த் பாசுவின் உதவியுடன் நிகழ்த்திய புதிர் நிகழ்ச்சியில் அஸ்வத் ரபீந்திரநாத் எனும் 13 வயது சிறுவன் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறான். இந்த நிகழ்ச்சி 'ஸ்டார் வேர்ல்டு' எனும் தனியார் தொலைக்காட்சியில் ஒளி பரப்பப் பட்டது. இவன் சென்னையில் உள்ள ஒரு பள்ளியில் படிக்கிறான். சிறு வயதிலிருந்தே பலவித நாடு களையும், இடங்களையும் அங்கு வாழும் மனிதர்களைப் பற்றியும் கலைக்களஞ்சியங்களை படித்துத் தெரிந்து கொண்டான். கணினியின் மீதும் அவனுக்கு மோகம் அதிகம். டென்னிஸ் விளையாட்டென்றால் அவனுக்கு உயிர்.



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:**



ஏகாம்பரம் தன் குடும்பத்துடன் பவானியம்மன் கோயில் திருவிழாவிற்குப் புறப்பட்டான். கிராமத்தின் எல்லையில் இருந்த ஆற்றைக் கடந்துதான் பவானியம்மன் கோயிலுக்குச் செல்ல முடியும். ஆற்றங்கரையை அடைந்த ஏகாம்பரம், படகுத்துறையில் ஒரு படகு இருப்பதைக் கண்டான். படகோட்டியிடம், "உன் படகில் பயணம் செய்ய கட்டணம் எத்தனை?" என்றான்.

''ஆளுக்கு ஒரு ரூபாய்,'' என்றான் படகோட்டி.

''ஒரு ரூபாய் தானா! இது உனக்கு எப்படி கட்டுப்படி ஆகிறது?'' என்று ஏகாம்பரம் ஆச்சரியத்துடன் கேட்டான். அதற்கு படகோட்டி புன்னகை புரிந்து விட்டு மௌனமாக இருந்தான். பின்னர் ஏகாம்பரம், தன் குடும்பத்துடன் படகில் ஏறி அக்கரைக்குச் சென்றதும் மூன்று ரூபாய் படகோட்டிக்கு தந்துவிட்டு சென்றான்.

இத்தனை குறைந்த கட்டணத்தில் படகோட்டிக்கு எப்படி கட்டுப்படி ஆகிறது? இந்தக் கேள்விக்கு விளக்கம் தரும் வகையில், மீதிக் கதையை 100 முதல் 150 வார்த்தைகளுக்குள் வருமாறு எழுதி முடியுங்கள். மேலே கூறிய கதையை திருப்பி எழுத வேண்டாம். கதைக்குப் பொருத்தமான தலைப்பு ஒன்று கொடுங்கள். பிறகு உங்கள் விளக்கத்தை ஓர் உறையிட்டு ''கதைப்போட்டி'' என்று உறையில் எழுதி, கீழ்க்காணும் கூப்பனையும் இணைத்து எங்களுக்கு அனுப்புங்கள்.

## முடிவு தேதி : நவம்பர் 30, 2005

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி-----------------

பள்ளியின் பெயர் ------------------------------------------------------------------------

வகுப்பு-------------------------------வீட்டு முகவரி--------------------------------------

------------------------------------------------------------------------------------------

-----------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்


## சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# அது என் கடமை

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்வர் தட்சசீல நகரில் ஒரு சிற்பியாக இருந்தார். அவரது புகழ் எல்லா நாடுகளிலும் பரவிய தால் அவரிடம் பல சீடர்கள் வந்து சிற்பக்கலையைக் கற்கலானார்கள்.

காசி மன்னனும் தட்சசீலச் சிற்பியைப் பற்றிக் கேள்விப் பட்டுத் தன் மகனும் சிற்பக்கலையில் பயிற்சி பெற வேண்டும் என எண்ணி அவனை தட்சசீலத்திற்கு அனுப்பி னான். பதினாறு வயதே நிரம்பிய அந்த இளைஞன் தனியாகவே காசியிலிருந்து நடந்து தட்சசீலத்தை அடைந்தான். அங்கு போதிசத்வரைக் கண்டு அவரது சீடனாகி அவருக்குப் பணிவிடை புரிந்து வரலானான்.

அவன் சிற்பக்கலையை சிரத்தை யுடன் கற்பது கண்டு போதிசத்வரும் மகிழ்ந்தார். இப்படியே சில மாதங்கள் கழிந்தன. இந்த சீடனும் குருவும் தினமும் ஊருக்கு வெளியே பாயும் ஆற்றிற்குப் போய் அதில் குளித்து விட்டுத் திரும்புவது வழக்கம். ஒரு நாள் அவர்கள் குளிக்கும் போது ஒரு கிழவி சிறிது எள்ளை எடுத்து வந்து கழுவி அதனைக் கரையில் உலரப் போட்டிருந்தாள்.

அரசகுமாரன் குளித்ததும் கரை ஏறி கிழவி எங்கோ பார்த்துக் கொண்டு இருந்த போது ஒரு பிடி எள்ளை அள்ளித் தன் வாயில் போட்டு மென்று தின்று விட்டான். ஆனால் அவன் எள்ளை எடுத்துச் சாப்பிட்டதைக் கிழவி கவனித்து விட்டாள். அப்போது அவள் எதுவும் சொல்லவில்லை.

மறுநாளும் அரசகுமாரன் அது போல எள்ளை எடுத்துச் சாப்பிடு வதைக் கிழவி கண்டாள். அப்போதும் பார்த்தும் பாராதது போல இருந்து விட்டாள். ஆனால் மூன்றாவது நாளும் அரசகுமாரன் எள்ளைத் திருடித் தின்ற போது அவள் கோபம்

கொண்டு அவனது குருவிடம் போய் ''உங்கள் இந்த சீடன் கடந்த மூன்று நாள்களாக என் எள்ளைத் திருடித் தின்று வருகிறான். எள் போனது பற்றி நான் கவலைப் படவில்லை. ஆனால் இவன் இப்படித் திருடுவதை வழக்க மாக்கிக் கொள்கிறானே என்றுதான் வேதனைப் படுகிறேன். அதனால் அவனுக்குத் தகுந்த தண்டனை கொடுங்கள்'' என்றாள்.

குருவும் தம் இருப்பிடத்தை அடைந்ததும் அரசகுமாரனை இழுத்துப் போய் எல்லாச் சீடர்களின் முன் நிறுத்தினார். பின்னர் அவன் ஆற்றங்கரையில் செய்த திருட்டுத் தனத்தை அவர் எல்லாரிடமும் கூறியதோடு பிரம்பை எடுத்து அவன் முதுகில் மூன்று அடிகளைச் 'சுளீர்' 'சுளீர்' என்று அடித்து ''இனிமேல் இப்படிப்பட்ட தகாத செயலைச் செய்யாதே. இது நினைவில் இருக்கவே உனக்கு இந்த தண்டனை'' என்றார்.

அரசகுமாரனுக்குத் தன் ஆசிரியர் மீது அடக்க முடியாத கோபம் ஏற்பட்டது. ஆனாலும் அவனால் என்ன செய்ய முடியும்? அப்போது அவன் மனத்தில் 'இருக்கட்டும். நான் மன்னனானதும் இவருக்குச் சரியான தண்டனை கொடுக்கிறேன்' எனக் கருவிக் கொண்டிருந்தான்.

சிறிது காலத்திற்குப் பின் அந்த அரசகுமாரனின் பயிற்சியும் முடிந்தது. போகுமுன் அவன் குருவிடம் ''ஐயா, நான் மன்னனானதும் தாங்கள் ஒரு முறை எனது அரண்மனைக்கு விஜயம்



செய்ய வேண்டும். தங்களுக்குத் தக்க மரியாதை செய்ய விரும்புகிறேன்'' என்றான். குருவும் மகிழ்ச்சியோடு அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டார்.

அரசகுமாரன் காசிக்குச் சென்ற சில மாதங்களுக்குப் பின் அரசனாக ஆனான். சில நாள்களில் தன்னை தண்டித்த குருவின் ஞாபகம் வரவே அவன் தட்சசீலத்திற்கு ஒரு ஆளை அனுப்பி தன் குருவை அழைத்து வரும்படி அனுப்பினான்.

அவனும் சிற்பியான குருவை தட்சசீலத்தில் கண்டு தன் அரசன் விடுத்த அழைப்பை அளித்தான். ஆனால் அதனைப் பெற்றுக் கொண்ட குரு சிறிது காலம் கழித்து வருவதாகச் சொல்லி அனுப்பினார்.

சில மாதங்களுக்குப் பிறகு குரு தம் சீடனைக் காணக் காசிக்குச் சென்றார். அவர் அரச சபைக்குள் நுழைந்ததும்

சபையோர் யாவரும் தம் அரசனின் குரு வந்திருக்கிறாரே என மகிழ்ந்து அவருக்கு மரியாதை செய்து உயர்ந்த ஆசனத்தில் உட்கார வைத்தார்கள். ஆனால் மன்னனோ தன் குருவை எரித்து விடுபவன் போலப் பார்த்து ''என்னப்பா! ஒரு பிடி எள்ளை எடுத்து நான் தின்றேன் என்ற அற்ப காரணத்திற்காக அன்று நீ என்னை தண்டித்தாயே. இப்போது உனக்கு மரண தண்டனை கொடுக்காமல் விட்டு விடுவேனா? '' என்று ஆவேசத்துடன் பொரிந்து தள்ளினான்.

அதுகேட்டு சபையில் இருந்தவர்கள் எல்லாரும் திடுக்கிட்டனர். ஆனால் குரு பயந்து விடாமல் கணீரென்ற குரலில் ''நீ இப்போது மன்னன். அப்போது என் சீடன். நான் உனது ஆசிரியராக இருந்தேன். குருகுல வாசத்தின் போது ஒரு சீடன் தவறு செய்தால் அவனைத் தண்டிக்க வேண்டியது அவனது ஆசிரியரின் கடமை. அன்று மட்டும் நான் அப்படிச் செய்யாது உன்னை விட்டு இருந்தால் இன்று நீ திருடனாகவே ஆகி இருப்பாய். அறிவாளிகள் யாராவது ஒருவர் தவறைச் சுட்டிக் காட்டினால் தம்மைத் திருத்திக் கொள்ளவே முயல்வார்கள். கோபமும் ஆத்திரமும் கொள்ள மாட்டார்கள்'' என்றார்.

அதை காசி மன்னனோடு சபையில் இருந்த அனைவரும் கேட்டனர். அரசனுக்கோ ஒரே அவமானமாகப் போய் விட்டது. சபையோரோ ''ஆகா! எப்படிப்பட்ட குரு!!'' என வியந்து கூறினார்கள்.

மறு நிமிடமே காசி மன்னன் தன் குருவான போதிசத்வரின் கால்களில் விழுந்து ''மகாத்மாவே! நீங்கள் தயவு செய்து என்னை மன்னியுங்கள். என்னைத் திருத்தி நல்வழிப்படுத்திய உங்களுக்கு என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்'' என்றான். போதிசத்வரும் தம் சீடனின் மனம் மாறியது கண்டு மகிழ்ச்சியடைந்தார். பின்னர் காசி மன்னன் வேண்டிக் கொண்டபடி அவர் தட்சசீலத்தில் இருந்து காசிக்கே வந்து அவனது ஆஸ்தான குருவாக இருந்து அவனுக்கு அவ்வப்போது நல்ல வழியைக் காட்டி வந்தார்.



# எப்போதோ நடந்த தவறு!

பிரதாப் என்ற பணக்கார ஜமீன்தார், பூபதி என்ற ஜமீன்தாரின் மகளான அனந்த லட்சுமியை திருமணம் செய்து கொண்டார். அனந்தலட்சுமியின் தந்தையான பூபதி, பிரதாப்பைவிட பல மடங்கு பெரிய பணக்காரர். சுமார் ஐம்பது கிராமங்களுக்கும் மேலாக அவருடைய வசம் பூர்வீகச் சொத்தாக இருந்தது. தங்கள் குடும்பத்தைவிட செல்வச் செழிப்பில் குறைந்த இடத்தில் திருமணம் செய்ய வேண்டி வந்ததில், அனந்தலட்சுமிக்கு மனக்கசப்பு ஏற்பட்டது. அதை எப்போதும் தன் கணவரிடம் குத்திக்காட்ட அவள் தவறுவதேயில்லை. பிரதாப்பின் பணியாட்கள் தங்கள் எஜமானியை கர்வம் பிடித்தவள் என்றும், சண்டைக்கோழி என்றும் தங்களுக்குள் பேசிக் கொள்ளுவதுண்டு. ஆனால் மனைவியின் குத்தல் பேச்சுகளை பிரதாப் பொருட்படுத்தியதேயில்லை.

அவர்களுக்குத் திருமணம் நடந்து ஐம்பது ஆண்டுகள் முடிந்தன. அதைக் கொண்டாட, கணவனும் மனைவியும் குதிரைகள் பூட்டிய வண்டியில் தங்கள் ஜமீன் நிலங்களின் வழியே உல்லாசப் பயணம் செய்தனர். அப்போது ஆடுகள் கூட்டத்தில் இருந்த ஒரு செம்மறி ஆட்டுக்கிடா அனந்தலட்சுமியின் பார்வையில் பட்டது. உடனே அவள் கணவரிடம், ''அந்த செம்மறி ஆட்டுக்கிடாவைப் பாருங்கள். எவ்வளவு நன்றாக கொழுத்திருக்கிறது? நமது ஐம்பதாவது ஆண்டு திருமண நிறைவு விழாவிற்கு, அதை வெட்டி கறிசமைத்து சாப்பிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!'' என்றாள்.

உடனே பிரதாப், ''ஐயோ பாவம்! ஐம்பது ஆண்டுகளுக்குமுன் எப்போதோ நடந்த தவறுக்கு, அந்த ஆட்டை ஏன் பலி கொடுக்க வேண்டும்?'' என்றாரே பார்க்கலாம்.

-செந்தில் குமார்



# பழமையான சுத்திகரிப்பு நிலையம்



வீணாவின் வகுப்பில், பெட்ரோலியத்தைப் பற்றி கூறிக் கொண்டிருந்த திரு தாஸ், ''மாணவர்களே! உலகிலேயே மிகப் பழமையான பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலை எங்கு இயங்கி வருகிறது தெரியுமா?'' என்று கேட்டார்.

''எங்கே? எங்கே?'' என்று மாணவர்கள் கேட்க, ''அது அசாம் மாநிலத்திலுள்ள டிக்போய் எனுமிடத்தில் உள்ளது. இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் நிறுவனத்திற்கு சொந்தமான அது நூறு ஆண்டுகளாக அங்கே இயங்கி வருகிறது'' என்றார் தாஸ்.

''அங்கு பெட்ரோலியம் கிடைக்கும் என்பதை எவ்வாறு கண்டு பிடித்தார்கள்?'' என்று மாணவர்கள் ஆவலுடன் கேட்டனர்.

''1867ஆம் ஆண்டு, டிக்போயில் இரயில் தண்டவாளங்களைப் பொருத்தும் பணியில் சில தொழிலாளர்கள் ஈடுபட்டிருந்தனர். மரங்கள் அடர்ந்து இருந்ததனால், பகல் வேளையிலும் இருட்டாக இருந்த அந்தக் காட்டுப் பகுதியில், யானைகளைக் கொண்டு மரக்கட்டைகளை தூக்கி வர ஏற்பாடு செய்திருந்தனர். ஒருநாள் ஒரு யானையின் கால்கள் ஏதோ ஒரு எண்ணெயில் நனைந்து பிசுபிசுவென்று இருந்ததைக் கண்ட தொழிலாளர்கள், யானை நடந்து வந்த பாதையை சோதித்தபோது, ஓரிடத்தில் எண்ணெய் பூமியிலிருந்து கசிந்து வருவதைக் கண்டனர். அதைக் கவனித்த ஆங்கிலேய அதிகாரி தொழிலாளர்களை நோக்கி ''அங்கே தோண்டப்பா, தோண்டு!'' (Dig Boy, Dig!) என்று உத்தரவிட்டார். அதிலிருந்து அந்த இடத்திற்கு டிக்போய் என்ற பெயர் ஏற்பட்டது'' என்றார் தாஸ்.

''அப்படியா?'' என்று சுவாரசியத்துடன் மாணவர்கள் கேட்டனர். ''கடந்த நூறு ஆண்டுகளாக இயங்கி வரும் அந்த சுத்திகரிப்பு ஆலை இன்று நவீன இயந்திரங்களுடன் வெற்றிகரமாக இயங்கி வருகிறது,'' என்று தாஸ் கூறி முடித்தார்.



# மகாவிஷ்ணு

புத்தரை வரவேற்க கபிலவஸ்து நகரம் விழாக் கோலம் பூண்டது. உலகத்திற்கே ஜோதியாய் விளங்கும் புத்தர் தம் நகரைச் சார்ந்தவர் என்பதில் பெருமைப்பட்டுப் பூரித்தனர். அவர் வரும் வழியில் மலர்களைத் தூவி வரவேற்கத் தயாராகி நின்றனர்.

தன் மகனைக் காண சுத்தோதன மன்னன் துடியாய் துடித்துக் கொண்டிருந்தான். புத்தரும் தம் சீடர்கள் சூழ வந்து கொண்டிருந்தார். எங்கும் 'புத்தம் சரணம் கச்சாமி' 'சங்கம் சரணம் கச்சாமி' என்றே கோஷங்கள் ஒலித்து வானைப் பிளந்தன.

சுத்தோதனனும் யசோதரையும் ராகுலனும் வழிமேல் விழி வைத்து அரண்மனை வ ாசலில் நி ன்றனர். புத்தர் பிக்ஷாபாத்திரத்தைக் கையில் ஏந்தியவாறே அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். ராகுலன் ஓடிப்போய் அவரது கால்களில் விழுந்து கண் களில் ஒற்றிக் கொண்டான்.

யசோதரையோ நீண்ட கால மாகப் பாராத தன் கணவனைப் பார்த்ததும் அவரைப் பார்த்தவாறே கற்சிலை போலாகி விட்டாள். பின்னர் உணர்வு பெற்றவளாய் அவரது பாதங்களில் விழுந்து வணங்கி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

தன் மகனைக் கட்டித் தழுவ எண்ணிய சுத்தோதனன் அவரது சன்னியாச கோலத்தைக் கண்டு மரியாதை செலுத்தினான். ஆயினும் தன் ம கனின் கோலத்தைக் க ண்டு அவன் மனம் விம்மியது. கண் களிலிருந்து கண்ணீர் வழிந்தது. பேச நா எ ழவில்லை. அ ப்படியே த ன்



நினைவை இழந்து தரையில் விழுந்து விட்டான்.

புத்தர் தன் தந்தையின் தலையைத் தன் மடிமீது எடுத்து வைத்துக் கொண்டார். தன் உத்தரீயத்தால் விசிறி மன்னனது மயக்கத்தைப் போக்கினார். பின்னர் அவர் ''தந்தையே! உங்கள் மகன் சித்தார்த்தன் வந்திருக்கிறேன்'' என்றார். சுத்தோதனனின் மயக்கம் தெளிந்தது. புத்தர் கூறிய மொழிகள் அமிர்தம்போல அவனுக்கு இருந்தன. அவரது பாதிமூடிய கண்கள் குளிர்ந்த வெண்ணிலவைப் பொழிவதுபோல இருந்தது.

திடீரென இருளிலிருந்து வெளிச் சத்திற்கு வந்தது போலவும் மங்கிக் கிடந்த அறிவு தெளிவு பெற்றது போலவும் மன்னன் உணர்ந்தான். மன்னன் மெல்ல புத்தர் முன் நின்ற ராகுலனும், யசோதரையும் மற்ற மக்களும் அதுபோல உணர்ந்தார்கள். எல்லாரும் 'புத்தம் சரணம் கச்சாமி' என்றே கோஷமிட்டார்கள்.

புத்தர் ராகுலனைத் தடவிக் கொடுத்தவாறே ''நீயும் புத்தனாகி சங்கத்தில் சேர்ந்து மனித குலத்திற்கே நன்மை புரிந்து வருவாயாக'' என ஆசீர்வதித்தார். புத்தன் என்றால் அவன் மனித குல மேம்பாட்டிற்கு உழைக்க வேண்டும் என்றும் அவர் ராகுலனுக்கு விளக்கினார்.

யசோதரை புத்தரைப் பார்த்தவாறே ''சுவாமி! நான் என்னையே தங்களுக்கு அர்ப்பணிக்கிறேன். இது நாள்வரை நான் உங்களது மனைவி. இனி மனித குலத்திற்குச் சேவை புரியும் சன்னியாசினி. உங்கள் அடிச் சுவடுகளைப் பின்பற்றி நடப்பதே என் கடமை. பெண்களுக்கும் பௌத்த மதத்தில் சம அந்தஸ்து உண்டு என அருள் புரியுங்கள்'' என வேண்டினாள். புத்தரும் அவளது வேண்டுகோளை ஏற்றார்.

அவரது தேரோட்டியான சென்னன் அவரைக் கடவுளாக பாவித்துக் கைகட்டி நின்றான். அவனை புத்தர் அருகில் அழைத்து ''சென்னா! ஒருவன் எவ்வளவு உயரியவனாகி விட்டாலும் தன்னைவிட வயதில் பெரியவர்களுக்கு மரியாதை செலுத்த வேண்டும். எனக்கு அறிவு வர என்னை வெளியுலகிற்கு அனுப்பியவன் நீ. உன் காரணமாக நான் நல்லறிவு பெற்றேன். என்னைக்

கடவுள் எனக் கருதுவதும் வழிபடு வதும் சரியல்ல. இது எனக்கு விருப்பமில்லை. நான் மனித தர்மத்தைக் கடைபிடிப்பவர்களில் ஒருவன்தானே'' என்றார்.

சென்னனோ ''தங்களை நாங்கள் புத்த பகவான் எனக் கூறுவதிலேயே பெருமிதம் கொள்கிறோம். தர்மத்தைக் கடைபிடித்து சங்கசேவையில் ஈடுபட்டு பக்தி சிரத்தையுடன் இருப்பது நமக்கு நெருங்கிய உறவை ஏற்படுத்துகிறது. எனவே உங்களை பகவான் என நாங்கள் அழைப்பதை நீங்கள் ஒருபோதும் தடை செய்யக் கூடாது'' என்றான்.

அப்போது முதல் அவர் புத்த பகவான் என்றே யாவராலும் அழைக்கப்பட்டார். சாக்கிய வம்சத்தில் ஒரு சிலரைத் தவிர மற்ற எல்லாருமே புத்த மதத்தைத் தழுவினார்கள். புத்தரது உபதேசங் களைக் கட்டளைகளாக ஏற்று செயல் பட்டார்கள். பலர் புத்தபிக்ஷுக்களாக மாறி புத்த மதத்தைப் பரப்பினார்கள்.

ஆரம்பத்திலிருந்தே புத்தரை வெறுத்து வந்த தேவதத்தன் இப்போதும் புத்தரின் எதிரியானான். புத்தரின் கொள்கைகளை எதிர்ப்பவர் களோடு சேர்ந்து கொண்டு அவருக்கு விரோதமாகச் செயல்பட்டு வந்தான்.

புத்தர் கபிலவஸ்து நகரிலிருந்து கிளம்பினார். அவரோடு அவரது சீடர்களும் அவரது மனைவி யசோதரையும் மகன் ராகுலனும் சென்றனர். அப்பயணத்தின் போதும்



புத்தர் சுஜாதையின் இல்லத்திற்குப் போய் அவளது மகனை ஆசீர்வதித்து அவர் ராகுலனிடம் ''மகனே! இவன் உனது தம்பி. நீங்கள் இருவரும் என்றும் ஒன்றாக இருக்க வேண்டும். இணை பிரியாமல் இருந்தும் மனித குலம் மேம்பாடு அடையப் பணி புரிந்து வரவேண்டும்'' என்றார்.

சுஜாதையும் புத்தரது சீடர் கூட்டத்தில் சேர்ந்தாள். இல்லத்து அரசிகளாக இருந்தும் புத்த மதத்தில் சேர்ந்து தம் புதல்வர்களை உயர்ந்த மனிதர்களாக்கும் மனப்பான்மை தாய்மார்களுக்கு உண்டு என்பதை எடுத்துக் காட்டுவதுபோல யசோத ரையும் சுஜாதையும் விளங்கினார்கள்.

புத்தர் தம் சீடர்களை நாலா திசையிலும் அனுப்பி புத்த மதத்தைப் பரப்பும் படிக் கூறினார். யசோத



ரையையும் ராகுலனையும் கபில வஸ்து நகருக்கே திரும்பிப் போய் கிழவராகி விட்ட தம் தந்தை சுத்தோதன மன்னருக்குப் பணிபுரிந்து சாக்கிய வம்சத்தை நல்வழியில் நடத்திச் செல்லுமாறு சொல்லி அனுப்பினார்.

புத்தர் ஒரு முறை தனியாகக் காட்டு வழியே போய்க் கொண்டிருந்தார். அக்காட்டில் அங்குலிமாலி என்ற பயங்கரத் திருடர் தலைவன் தன் கூட்டத்தினரோடு வாழ்ந்து வந்தான். அவன் அவ்வழியே போகும் பயணிகளை மடக்கி அவர்களது பொருள்களை எல்லாம் மரியாதை யாகக் கொடுத்துவிடும்படி மிரட்டி வந்தான். அவர்கள் அதற்கு இணங்கி னால் அவர்களது பொருள்களைக் கவர்ந்து கொண்டதோடு அவர்களது கைகளிலுள்ள கட்டை விரல்களை வெட்டி எடுத்து மாலையில் கோர்த்துத் தன் கழுத்தில் அணிந்து கொண்டு வந்தான். அவர்கள் தாம் கொண்டு வந்த பொருள்களைக் கொடுக்க மறுத்தால் அவர்களைக் கொன்று வந்தான். இதனால்தான் அவனுக்கு அங்குலிமாலி என்ற பெயர் ஏற்பட்டது. புத்தர் தனியே போவதைக் கண்ட மாடுமேய்ப் பவர்கள் சிலர் அவரிடம் ''காட்டில் தனியே போகாதீர்கள். அந்த அங்குலி மாலியால் உங்களுக்கு ஆபத்து நேர்ந்துவிடும்'' என்றார்கள். ஆனால் புத்தரோ அது கேட்டு சிரித்துக் கொண்டே தம் வழியில் சென்றார்.

வெகு தூரத்திலிருந்தே அங்குலி மாலி புத்தர் தனியாக வருவதைப் பார்த்துவிட்டான். அவரது கையில் காவித்துணிகளுள் ஏதோ சுற்றி வைக்கப்பட்டிருந்ததையும் அவன் கவனித்தான். அவன் உடனே பளபளவென மின்னும் வாளை எடுத்துக் கொண்டு புத்தர் முன் போய் ''யார் நீ? உன்னிடமுள்ள விலை உயர்ந்த பொருளை எடுத்துக் கொடு'' என்று மிரட்டினான்.

புத்தரும் சிரித்துக் கொண்டே தன் காவித்துணியில் சுற்றி வைத்திருந்த கப்பறையை எடுத்து அவனிடம் கொடுத்தார். அவனும் அதை வாங்கிப் பார்த்துவிட்டு ''இந்தக் கப்பறையையா இப்படி பத்திரமாகச் சுற்றி எடுத்து வந்தாய்? இதனையா விலையுயர்ந்த பொருள் என்று

எனக்குக் கொடுத்து என்னை ஏளனம் செய்கிறாய்? உனக்கு உயிர் போய் விடுமே என்ற பயமே இல்லையா? நான் யார் என்று உனக்குத் தெரியுமா?'' என்று உறுமினான்.

புத்தரும் ''நீயும் மனிதன். நானும் மனிதன். ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்கு ஏன் பயப்பட வேண்டும்? '' என்று கேட்டார். அங்குலிமாலியோ ''சரிசரி, உன் கட்டை விரல்களை நான் வெட்டி எடுத்துக் கொண்டு உன்னை அனுப்புகிறேன். பிழைத்துப் போ. அவற்றை நீ கொடுக்க மறுத்தாலோ நான் உன்னைக் கொன்று விடுவேன்'' என்றான்.

புத்தரும் ''நீ என்னைக் கொல்லத் தானே போகிறாய்? தாராளமாகக் கொல். மனிதனாகப் பிறந்தவன் என்றாவது ஒருநாள் இறந்துதானே ஆக வேண்டும்? நீயும் என்னைப் போல ஒருநாள் இறக்க வேண்டிய வனே, நான் கவலையற்று இப்போது உயிரைவிடுவது போல நீயும் உன் உயிரை இழக்கச் சம்மதிப்பாயா? நான் எந்த ஜீவராசிக்கும் தீங்கு இழைக்கக் கூடாது என நினைப்பவன். எனவே என்னை நீ தாக்கினால் எதிர்க்க மாட்டேன். மகிழ்ச்சியுடன் மரணத்தை ஏற்கிறேன். இதுபோல உன்னால் செய்ய முடியுமா? சொல்'' என்று கேட்டார்.

புத்தர் இவ்வாறு கூறியது கேட்டு அங்குலிமாலி திகைத்துப் போனான். அவர் கூறிய சொற்களை நினைத்து யோசனை செய்தான். அப்போதுதான்



அவனுக்கு தான் அதுவரை செய்தது கோரமான பாவச் செயல்கள் என்பது புரிந்தது. அப்பாவங்களுக்கு மன்னிப்பு கிடைக்குமா? அதனைப் போக்கிக் கொள்ளப் பிராயச்சித்தம் ஏதாவது உண்டா? இவ்வாறு அவன் எண்ணினான். அதற்கு முன் அவன் புத்தரைப்பற்றிக் கேள்விப்பட்டு இருந்தான். தன் முன் நிற்பவர் புத்தரே என அறிந்து கொண்டு அவன் அவரது கால்களில் விழுந்து ''புத்தம் சரணம் கச்சாமி'' எனக்கூறினான்.

புத்தரும் ''அங்குலிமாலி! நீ எண்ணியது சரியே. நான்தான் புத்தர். உன்னைத் திருத்தவே நான் இங்கு வந்தேன். அதற்காகத்தான் உனக்கு என் கப்பறையைக் கொடுத்தேன். நீ இதுவரை உன் வாழ்க்கையில் நடந்ததை எல்லாம் மறந்துவிடு. பௌத்த பிக்ஷுவாகி என் சீடர்களோடு சேர்ந்துகொள். வா போகலாம்'' என்றார்.

அங்குலிமாலியும் ''புத்த பகவானே! நான் ஒருவன் மட்டும் இப்படி பிக்ஷுவாவது சரியல்ல. என் கூட்டாளிகளாக இதுவரை இருந்தவர்களையும் இத்தொழிலைவிடச் சொல்லித் தங்களது சீடர்களாகும் படிச் செய்கிறேன். என்னோடு அவர்களும் நல்லவர்களாக மாறி விடட்டும்'' எனக் கூறி உடனே மற்ற திருடர்களை எல்லாம் அழைத்து வந்தான். திருடர்களின் நண்பர்கள் எல்லாரும் புத்தரின் கால்களில் விழுந்து வணங்கினார்கள். இனி தாம் திருடுவது இல்லை என்றும் தம் மனம் மாறிவிட்டதாகவும் கூறித் தங்களையும் அவரது சீடர்களாக ஏற்கும்படி வேண்டினார்கள்.

புத்தரும் மனம் திருந்திய அவர்களை மகிழ்ச்சியுடன் தம் சீடராக ஏற்றுக் கொண்டார். அவர்களும் தம் திருட்டுத் தொழிலை விட்டுத் திருந்தி நல்லவர்களாகிப் புத்தரது சீடர்களாயினர். இவர்களைப் போலவே எவ்வளவோ திருடர்களும் கொடியவர்களும் கெட்டவர்களும் புத்தரது உபதேசங்களைக் கேட்டு மனம் மாறி அவரது சீடர்களாகி நல்வாழ்வு நடத்தி வரலானார்கள்.





# சாபங்கள் வரங்களாக மாறின!

ஒரு கிராமத்தில் நாராயணன் என்ற ஏழை விவசாயி இருந்தான். மற்றவர்களுடைய நிலத்தில் கூலிக்கு வேலை செய்து வந்து கிடைத்த வருமானத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தான். அவனுடைய மனத்தில் நெடு நாள்களாக இரண்டு ஆசைகள் இருந்தன. ஊர் ஊராக சுற்றிப் பார்க்க வேண்டுமென்பதும், சுவையான உணவுகளை உண்ண வேண்டுமென்பதும் ஆக அவனுடைய இரண்டு ஆசைகள் நிறைவேறாமலிருந்தன.

நாடு முழுதும் சுற்றிப் பார்க்க முடியவில்லையெனினும், தலைநகரத்தில் நடக்கும் வசந்தோற்சவத்திற்காகவாவது போய் வரலாமே என்று தோன்றியது. அந்த ஆண்டு உற்சவம் நடக்கும் நாள் வந்ததும், நாராயணன் தன் நண்பன் கேசவனுடன் தலைநகரை நோக்கிப் புறப்பட்டான். இருவரும் வெகுதூரம் நடந்து சென்று காட்டுப் பகுதியை அடைந்தனர். காட்டைக் கடப்பதற்குள் இரவு வந்து விட்டது. இரவு நேரத்தில் காட்டில் எங்கே இருப்பது என்று கவலையில் ஆழ்ந்திருந்த அவர்களின் கண்களில் சற்றுத் தொலைவில் ஓர் ஆலயம் தென்பட்டது. நாராயணன் இரவை அந்த ஆலயத்தில் கழிக்க விரும்பினான். ஆனால் அவன் நண்பன் கேசவன், அது சண்டி எனும் மிக உக்கிரமான அம்மன் இருக்கும் கோயில் என்றும், அவள் கண்ணில் பட்டால் ஆபத்து விளையும் என்றும் கூறினான். ஆனால் நாராயணன் அதற்கு ஒப்புக் கொள்ளாமல் கோயிலில் உறங்குவதே பாதுகாப்பானது என்று கருதினான். இறுதியில் நாராயணன் கோயிலை நோக்கிச் செல்ல, அவனுடைய நண்பன் கூட வராமல் பிரிந்து தனியே சென்று விட்டான்.

கோயிலுக்குள் புகுந்த நாராயணன் சற்று நேரத்திலேயே படுத்து உறங்கி விட்டான். நடு இரவில் யாரோ தன்னை அழைக்கும் சத்தம் கேட்டு



விழித்த நாராயணன் தன் முன்னால் சண்டி அம்மன் சிவந்த கண்களுடன், பயங்கரமான தோற்றத்துடன் காட்சியளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அ வனைப் ப ார்த்து கோபத்துடன், ''நீ யாரடா? என் கோயிலில் படுத்து உறங்க என்ன தைரியம் உனக்கு?'' என்று சீறினாள்.

நாராயணன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்து நின்று, ''மன்னிக்க வேண்டும் தேவி! நான் ஓர் ஏழை விவசாயி. தலைநகருக்குச் செல்லும் வழியில் உ ன்னுடைய C காயில் தென்பட்டது. இரவு நேரமானதால், இங்கேயே படுத்து உறங்கி விட்டேன்,'' என்று பணிவுடன் பதிலளித்தான்.

''ஏண்டா! தூங்குவதற்கு என் கோயில்தானா உனக்குக் கிடைத்தது? அத்துமீறி என் கோயி லில் நுழைந்து தூங்கத் துணிந்த நீ இன்னும் ஓராண்டு காலத்திற்கு எந் த செடியைத் தொட்டாலும், அது வாடி விடும்!'' என்று சபித்து விட்டு மறைந்து போனாள் அம்மன்.

அதற்குப் பிறகு அவனுக்குத் தூக்கமே வரவில்லை. இனி ஓராண்டு காலத்திற்கு தான் எப்படி விவசாயம் செய்ய முடியும்? என்ற கவலையில் ஆழ்ந்த நாராயணன் மறுநாள் காலையில் எ ழுந்து, த லைநகரை நோக்கி நடந்தான்.

வசந்தோற்சவம் சிறப்பாக நடந்தது. அன்று நாடெங்கிலுமிருந்து திரண்டு வந்திருந்த விவசாயிகள் மன்னரிடம் தங்கள் குறைகளை சொல்லிக் கொண்டிருந்தனர். பெரும்பாலோருடைய பிரச்சினை ஒன்றாகவே இருந்தது. வயல்களில் ஒரு புதுவிதமான களைச்செடி உண்டாவதாகவும் அதைப் பிடுங்கி எறிந்தாலும், மீண்டும் வளருகிறது என்றும், அதனால் விளைச்சல் குறைகிறது என்றும் குறை கூறினர். அவர்களுடைய குறையைக் கேட்ட நாராயணனுக்கு ஆச்சரியமாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது. உடனே அவன் மன்னரிடம், ''அரசே! எனக்கு மட்டும் வாய்ப்பு கொடுத்தீர் களானால், களைச்செடிகளை மிக எளிதாக அகற்றிவிடுவேன்!'' என்றான். சில ெ சடிகளைத் ெ தாட்டு, தான் கூறுவது உண்மையென்று நிரூபித்தும் காட்டினான். மன்னரும் மற்ற விவசாயிகளிடம் நாராயணனிடம் உதவி பெற்றுக் கொள்ளச் சொன்னார். அனைத்து விவசாயிகளும் போட்டி போட்டுக் கொண்டு நாராயணனைத்

தங்களுடன் அழைத்துச் சென்றனர். சென்ற இடங்களில் எல்லாம், நாராயணன் கை பட்டவுடன் களைச் செடிகள் வாடின. யாவரும் மகிழ்ந்து, நாராயணனுக்கு வயிறார உணவிட்டு, பொருளும் கொடுத்தனுப்பினர். இவ்வாறு நாராயணனின் இரண்டு ஆசைகளும் நிறைவேறின. மன்னரும் நூறு ஏக்கர் நிலம் பரிசாளித்தார்.

அடுத்த ஆண்டும், நாராயணன் வசந்தோற்சவத்திற்குப் புறப்பட்டான். சென்ற ஆண்டு செய்ததைப் போல், அந்த முறையும் இரவில் அம்மன் கோயிலில் படுத்துறங்கினான். நடு இரவில் அவன் முன் அம்மன் தோன்றி எழுப்பினாள். நாராயணன் அவளை வணங்கி, ''தேவி! நீங்கள் கொடுத்த சாபம் எனக்கு வரமாக அமைந்து விட்டது. என்னுடைய ஆசைகள் நிறைவேறின. மிகவும் நன்றி, அம்மா!'' என்றான்.

ஆனால் அம்மனோ கோபத்துடன், ''என்ன திமிர் இருந்தால், மறுபடியும் இங்கே வந்து உறங்குவாய்! இன்னும் ஓராண்டு, நீ கால் வைக்கும் இடமெல்லாம் பெரிய பள்ளங்கள் தோன்றும்!'' என்று சாபம் கொடுத்து விட்டு மறைந்து விட்டாள். நாராயணன் அதிர்ச்சியுற்றான்.

மறுநாள் காலை அந்த வழியே சென்றவர்கள் சிலரை அழைத்து, ஒரு பல்லக்கு ஏற்பாடு செய்து கொண்டு உற்சவத்திற்குச் சென்றான். மன்னரை சந்தித்து தனக்கு அம்மன் கொடுத்திருக்கும் சாபத்தைப் பற்றிக் கூறினான். அந்த சாபத்தை பொது நன்மைக்கு எவ்வாறு பயன் படுத்தலாம் என்றும் கூறினான்.



எங்கெல்லாம் புதிதாக குளங்கள், ஏரிகள் தோண்ட வேண்டியுள்ளதோ, புதிய வாய்க்கால்கள் அமைக்க வேண்டியுள்ளதோ, அங்கெல்லாம் தன்னை அனுப்பி வைக்க வேண்டினான். மன்னருக்கு அந்த யோசனை மிகவும் பிடித்து விட்டது. ராஜ்ஜியத்தில் எங்கெல்லாம் நீர்ப் பாசன வசதிகள் புதியதாக அமைக்கப்பட வேண்டியிருந்ததோ, அங்கெல்லாம் நாராயணனை ஒரு பல்லக்கில் அனுப்பி வைத்தார். நாராயணன் அந்த இடம் வரை பல்லக்கில் சென்று, பிறகு குளம் தோண்ட வேண்டிய இடங்களிலும், வாய்க்கால் செய்ய வேண்டிய இடங்களிலும், தன் பாதங்களை நிலத்தில் வெறுமனே பதிய வைத்தே உருவாக்கி விட்டான்.

இவ்வாறு இரண்டு சாபங்களையும் நாட்டிற்கும் தனக்கும் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டான். மூன்றாம் ஆண்டு, மீண்டும் வசந்தோற்சவத்திற்குப் புறப்பட்ட நாராயணன், வழக்கப்படி சண்டியம்மன் கோயிலில் இரவு படுத்து உறங்கினான். நடு இரவில் வழக்கப்படி சண்டி அம்மன் அவனைத் தட்டியெழுப்பி, சீற்றத்துடன், ''அயோக்கியப் பதரே! நான் இரண்டு முறை சாபம் கொடுத்தும், சிறிது கூட பயமின்றி இங்கே மறுபடியும் வந்து விட்டாயா? இன்னும் ஓராண்டு, நீ எந்தப் பொருளின் மீது உன் பார்வையை செலுத்தினாலும் அது எரிந்து சாம்பலாகும். இதோ, இந்தத் துணியினால் உன் கண்களை கட்டிக் கொள்!'' என்று சொல்லி மறைந்து விட்டாள்.

மறுநாள் காலை கோயிலிலிருந்து வெளியே வந்த நாராயணன் வேண்டுமென்ற தன் கட்டினை அவிழ்த்து கோயிலை பார்த்தான். அடுத்த கணமே, அந்தக் கோயில் எரிந்து சாம்பலாயிற்று. அதன் பிறகு சண்டி அம்மன் அவனுக்களித்த சாபமும் நீங்கியது. நாராயணன் மௌனமாக வீடு திரும்பினான்.

அதன்பிறகு அந்த இடத்தில் நாராயணன் காட்டு வழி யாகச் செல்லும் பயணிகளுக்காக ஒரு சத்திரம் கட்டினான்.



அமிருதபுரியில் ஒளிந்திருந்த புரட்சிக்காரர்களை வளைத்துப் பிடிக்கத் திட்டமிட்ட வீரசிம்மன் மற்றும் ஜபரை வசந்தன், இளவரசன் சூர்யா தங்களுடைய மற்ற புரட்சி வீரர்களுடன் சேர்ந்து பயங்கரத் தாக்குதல் நடத்தியதில், ஜபர் கொல்லப்படுகிறான். வீரசிம்மன் தனியாகிறான்.





















வசந்தனும் தன்னுடைய கத்தியை எடுத்துக் கொண்டு தாக்குதலுக்குத் தயாராகிறான்.


வீரசிம்மனின் வாள் தன் மீது படாமல் வசந்தன் தப்பிக்கிறான்.


இருவருக்கும் பயங்கர வாள் சண்டை நடக்கிறது.


இறுதியில் வீரசிம்மனின் கையிலிருந்த வாளை வசந்தன் தட்டிப் பறிக்கிறான்.


வீரசிம்மன் தன் வாளை இழந்து மண்ணில் குப்புற விழுகிறான்.
வீரசிம்மா! செத்து ஒழி!


வசந்தா! நிறுத்து!
தன் பெயரைச் சொல்லி யாரோ கூப்பிடுவது கேட்கிறது.


ஜெயானந்தர் தோன்றுகிறார்.
உயிரைக் கொல்வது நமது தர்மமல்ல!


வீரசிம்மனுக்கு ஒரே அதிர்ச்சி
எனக்கு என்ன ஆகிவிட்டது?


கனகதுர்கா தேவியின் உருவம் அவன் கண்முன் தோன்றுகிறது. தேவி ஒரு மானிடப் பெண்ணின் உருவம் தாங்கி வந்ததுபோல் தெரிகிறது.


மறுவினாடியே, அந்த உருவம் மறைகிறது...


...அந்த இடத்தில் அமரரான மன்னர் சாந்தி தேவரின் உருவம் தோன்றுகிறது. பயந்துபோன வீரசிம்மன் தரையில் அமர்ந்தவாறே பின்னோக்கி நகருகிறான்.


...தடுமாறி கீழே விழுகிறான். சுற்றியும் புரட்சிக்காரர்களின் ஆரவாரம் கேட்கிறது.


தன் முன்னால் ஜெயானந்தர் நிற்பது தெரிகிறது.
வீரசிம்மா! இளவரசனின் பிறந்தநாள் விழாவில் எல்லாரும் பங்கேற்றிருந்த சமயத்தில், நயவஞ்சகமாக நீ சிம்மாசனத்தைக் கைப்பற்றினாய்! ஒரு வீரனுக்கு இது அழகா?


அன்று முதலே குடிமக்கள் உன்னை வெறுக்கத் தொடங்கினர்.
வீரசிம்மனுடைய குற்றங்களை விவரித்துக் கொண்டே சென்றார்.
அவர்களை புரட்சிக்காரர்கள் என்று பிரகடனம் செய்தாய், நாட்டை விட்டே விரட்டினாய்!
வீரசிம்மன் மலைச்சிகரத்தின் விளிம்பை நோக்கி பின்னோக்கி நகருகிறான்.
மக்கள் பட்டினியால் இறக்கவும் காரணமானாய்!
அது மட்டுமா! காட்டில் அமைதியாக இருந்த எங்களுக்கும் இன்னல்கள் விளைவித்தாய்!
...பின்னால் சென்றால் சிகரத்திலிருந்து விழுவோம் என்ற நினைவே இல்லை.
தெரியாமல் மேலும் பின்னால் நகர்ந்த வீரசிம்மன் மலையிலிருந்து கீழே விழுகிறான்.
ஹா! ஐயோ!
வசந்தனும், மற்றவர்களும் மகிழ்ச்சியில் கூக்குரலிடுகின்றனர்.
கடவுளே அவனை தண்டித்து விட்டார். நல்ல வேளை, நமது கைகள் கறையாகவில்லை. வாருங்கள், செல்வோம்! நிறைய வேலைகள் உள்ளன!
தொடரும்.

பாரதப் பண்பாட்டு நிகழ்ச்சிகள்

# கொனாரக் நடனவிழா



இரவு நேரத்தில், ஆலயத்தின் கோபுரங்களின் பின்னணியில், திறந்த வெளியரங்கில் கனவுலகில் சஞ்சரிப்பது போல் அழகிய பெண்கள் தேவலோகத்து அப்சரங்கள் போல் மயக்கும் தோற்றத்துடன் நடனமாடினால், அந்தக் காட்சி எப்படியிருக்கும்? அத்தகைய அற்புதமான காட்சியைக் காணவேண்டுமெனில், ஒரிசா மாநிலத்திலுள்ள கொனாரக் கோயிலுக்கு டிசம்பர் மாதம் முதல் தேதியன்று வாருங்கள். இந்த நடனவிழா கொனாரக்கில் ஆண்டு தோறும் நடைபெறும் கண்கொள்ளாக் காட்சியாகும். அந்தக் காலத்திலேயே ஒரிசாவில் உள்ள கோயில்களில் இத்தகைய சிறப்பான நடன நிகழ்ச்சிகளை நடத்துவதற்காக நடனமந்திரா என்ற மேடையை உருவாக்கி உள்ளனர். மேடையைச் சுற்றிலும் கல்லில் வடித்த நாட்டிய மாதர்கள் அரங்கத்திற்கு அழகு ஊட்டுகின்றனர்.

கொனாரக்கில் நடைபெறும் நடனவிழாவில் பல புகழ் பெற்ற கலைஞர்களின் நடன நிகழ்ச்சிகளைக் காணலாம். பழைய நாட்டியக்கலைகளுக்கு உயிரூட்டி புத்துணர்ச்சி அளிப்பதற்காக இந்த நடனவிழா ஒரு வாரம் நடைபெற உள்ளது.

செவிக்கினிய இசையும், கண்களுக் கினிய நடனத்தோடு நாவிற்கினிய விருந்தும் இங்கே பெறமுடியும். தவிர பொருட்காட்சியையும் காணலாம்.

ஒரிசா மாநில அரசின் சுற்றுலாத் துறையினரால் இந்த நடனவிழா ஏற்பாடு செய்யப்படுகிறது.

# புயல், வெயில், காற்று மற்றும் மரம்

கடந்த ஆண்டு டிசம்பரில் ஏற்பட்ட சுனாமியும், சமீபத்தில் அமெரிக்காவை உலுக்கியெடுத்த காத்தரினா புயலும் நமக்கு எவற்றை வலியுறுத்துகின்றன? இந்த ஆண்டின் தொடக்கத்தில் குஜராத், பிறகு மத்தியப்பிரதேசம், மும்பை, மகாராஷ்டிரா, கர்நாடகா என்று தொடர்ந்து பல இடங்களிலும் அடாத மழை பெய்து வெள்ளப் பெருக்கைத் தோற்றுவித்தன. இவை அனைத்தும் இயற்கையின் சீற்றத்தைச் சார்ந்துள்ளன, அவற்றின் காரணங்களை ஆராய வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தை மட்டுமல்லாமல் பொதுமக்களுக்கும் இருக்கிறது.

மனிதன் தன் வாழ்வு வளம் பெற முன்னேற்றப் பாதையில் அடியெடுத்து வைத்துக் கொண்டே செல்கிறான். ஆனால் அந்த முயற்சிகளில் இயற்கையோடு ஒருங்கிணைந்து செயற்படாமல், இயற்கையை எதிர்த்து செயற்படுவதால் இயற்கை சீற்றம் கொண்டு தனது சக்தியைக் காட்டுவதில் வியப்பில்லை.

கடந்த நூறு ஆண்டுகளாக உலகெங்கும் உஷ்ணநிலை அதிகரித்துக் கொண்டே வருகிறது. வாயு மண்டலத்தில் அதிகரித்து வரும் வெப்பமே பெரும் அழிவிற்குக் காரணமாக அமைந்துள்ளது.

நாம் வாழும் பூமியில் கார்பன் நிறைந்துள்ளது. தாவரங்கள், மிருகங்கள், பறவைகள், புழு பூச்சிகள், மனிதர்கள் ஆகிய அனைவரின் உடல்களிலும் இவை நிறைந்துள்ளது. கார்பன் வாயு மண்டலத்திலுள்ள ஆக்சிஜனுடன் சேர்ந்து எரியும் போது கிடைக்கும் வெப்பத்தினால்தான், உயிர்கள் இயங்குகின்றன. பூமியின் அடியில் புதைந்துள்ள நிலக்கரி, பெட்ரோலியம், இயற்கை வாயு ஆகிய அனைத்து எரிபொருட்களிலும் கார்பன் உள்ளது.

கார்பன் எரியும் போது கார்பன் டை ஆக்சைடு வாயு உண்டாகிறது. இது காற்றுடன் கலந்து விடுகிறது. பூமியிலுள்ள தாவரங்கள் இந்த கார்பன் டை ஆக்சைடை உட்கிரகித்துக் கொண்டு, அதை கார்பன், ஆக்சிஜன் என்று தனியாகப் பிரித்து, சூரிய ஒளியின் உதவியினால் கார்பனிலிருந்து தங்களுக்கு உணவு தயாரித்துக் கொள்கின்றன. தாவரங்கள் வெளியேற்றும் ஆக்சிஜன் காற்றுடன் கலந்து விடுகின்றன. அவை தயாரிக்கும் உணவு இலைகளிலும், பூக்களிலும், காய்களிலும், கனிகளிலும், மற்ற பகுதிகளிலும் சேமித்து வைக்கப்படுகின்றது. இந்தத் தாவரங்களை மிருகங்கள், மனிதர்கள் உண்பதால், அவர்களுடைய உடல்களிலும் கார்பன் சேருகிறது. உயிரினங்கள் இறந்து மண்ணோடு மண்ணாக மக்கிப்போகும் சமயத்திலும், மனித உடல்கள் எரிக்கப்படும்போதும் கார்பன் டை ஆக்சைடு உருவாகிறது. மக்கிப் போன தாவரங்களும், மற்ற உயிரினங்களும் பூமியில் வெகு ஆழத்தில் சில சமயங்களில் புதைந்து போய், ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகு நிலக்கரியாகவும்,

பெட்ரோலியமாகவும் மாறுகின்றன. கார்பனுடைய கூட்டுப் பொருட்களான இவை எரியும் போது, மீண்டும் கார்பன் டை ஆக்சைடு உருவாகி காற்றுடன் கலக்கிறது. இவ்வாறு கார்பன் கார்பன் டை ஆக்சைடாக மாறுவதும், கார்பன் டை ஆக்சைடு மீண்டும் கார்பனாக மாறுவதுமான இந்த இயற்கை மாற்றத்திற்கு கார்பன் சுழற்சி என்று பெயர்.

பகற்பொழுதில், தாவரங்களால் கார்பன் டை ஆக்சைடு உட்கிரக்கிப்படுகிறது. பகலில் சூரிய ஒளி பூமியில் படும்போது காற்று மண்டலத்தில் உள்ள குறைந்த அளவு கார்பன் டை ஆக்சைடு சூரியனின் கதிர்களைத் தடுப்பதில்லை. ஆகவே பகல் வேளைகளில், பூமி மிக விரைவாக வெப்பம் அடைகிறது. பகல் நேரத்தில் வெப்பமடைந்த பூமியிலிருந்து வெப்பம் இரவு நேரத்தில் வானத்தை நோக்கிப் பாய்கிறது. அந்த சமயம் காற்றிலுள்ள சற்றே அதிகமான கார்பன் டை ஆக்சைடு இந்த வெப்பத்தை மேல் நோக்கிச் செல்லாமல் ஓரளவு மட்டும் தடுக்கின்றன.

ஆனால் கார்பன் டை ஆக்சைடு இரவு நேரத்தில் அதிக அளவு இருந்தால், பூமியின் வெப்பம் பிரதிபலிக்கப் படாமல் கார்பன் டை ஆக்சைடு தடுத்து விடுவதால், காற்று மண்டலம் வெப்பமாகவே உள்ளது. இவ்வாறு பகல், இரவு தொடர்ந்து வெப்பமாக இருந்தால், பருவநிலை பெரிதளவில் பாதிக்கப்பட்டு, பின் விளைவுகள் உண்டாகின்றன. பூமியிலுள்ள மொத்த அளவு கார்பனும் கார்பன் டை ஆக்சைடும் சரியான விகிதத்தில் இருக்க வேண்டும்.

உலகில் இன்று ஆண்டு ஒன்றுக்கு 360 கோடி டன் பெட்ரோலியம், மற்றும் பெட்ரோலியத்திற்குச் சமமான 200 கோடி டன் இயற்கை வாயு, 240 கோடி டன் நிலக்கரி எரிக்கப்படுவதால், பூமியில் கார்பனின் அளவு குறைந்து கொண்டே போய், கார்பன் டை ஆக்சைடு அதிகமாகிக் கொண்டே வருகிறது. கார்பன் டை ஆக்சைடை கார்பனாக மாற்ற மரங்களால் மட்டும் தான் முடியும். ஆக, நாம் செய்ய வேண்டிய முக்கியமான காரியம் ஒன்றே! அதுதான் மரங்களை நடுவது!

*லீனா மெஹந்தலே, உதவிச் செயலாளர் (பி.சி.ஆர்.ஏ)*



# போட்டோ வாக்கியப் போட்டி





KALANIKETAN BALU

**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



KALANIKETAN BALU

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ளதபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஜனவரி 2006 இதழில் வெளியிடப்படும். போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துகள்!

## பரிசு பெற்றவை

**செப்டம்பர் 2005 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

*கருணை மீனா*
*எண் 12 பாபுஜி தெரு,*
*கிழக்கு தாம்பரம்,*
*சென்னை-59.*



"கனிகள் காசாகும் நேரமிது;
காய்கள் கனியாகும் காலமிது."



சென்ற மாதம் அக்டோபர் மாத இதழில் தில்லியின் செங்கோட்டையைப்பற்றி வெளியாயிருந்த படத்துடன் கூடிய கட்டுரையில், தவறுதலாக ஆக்ரா கோட்டையின் படம் காண்பிக்கப் பட்டிருந்தது. செங்கோட்டையின் படத்தை மேலே வெளியிட்டுள்ளோம். தவறுக்கு வருந்துகிறோம்.

-ஆசிரியர்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

